உ

கடவுள் துணை.

சப்தரிஷிகளில் மகாமகத்துவம் பொருந்தியுள

கௌசிகமஹா ரிஷியருளிய

# கௌசிக சிந்தாமணி.

## மூன்றாம் பாகம்



இஃது

கோயமுத்தூர் ஜில்லா, அனுப்பாபாளையம்,

ஸ்ரீமான்,

முருகைய ஜோதிடர் அவர்களால்

பரிசோதித்து

. கோபால் நாயகரது

சென்னை, கோள்டன் எலெக்ட்ரிக் பிரஸ்ஸில்

பதிப்பிக்கப் பெற்றது.



தன் விலை] **1923.** [ரூபா, **1.**




இதனுல் எல்லா அச்சுக்கூடத் தலைவர்களுக்கும் மற்றயாவர்களுக்குந் தெரிவிப்பது யாதெனில்:—

1923ஷு எப்ரல்மீ 3உ சென்னை, முத்தியாலுப்பேட்டை கச்சாலீஸ்வரர் தோட்டத்தெருவு, 3/17-வது நெ. வீட்டிலிருக்கும், சி. வி. கேசவலு நாயடு குமாரன், வி. கே. வீராசாமி நாயடு எழுதிக்கொடுத்த ரிஜிஸ்தர் காபிரைட் புஸ்தகங்களான, கௌசிகசிந்தாமணி. 1-ல் பாகம், ஷை2-ம் பாகம், ஷை-3-ம் பாகத்தையும், ரிஜிஸ்டர்காபிரைட் சுதந்தரத்தை அடியிற்கையொப்பமிட்ட டி. கோபால் நாயகராகிய யான் கிரையத்திற்கு பெற்றுகொண்டு என்னுலச்சிட்டு வெளிப்படுத்தியிருப்பதால், ஷை கௌசிக சிந்தாமணி. 3-பாகத்தை யாதாமொருவர் அச்சிடுவரேல் 1887-ஷுத்து 25-வது ஆக்டு 20-வதுபிரிவு 6-வது உட்பிரிவின் விதிப்படி அதனுல் எனக்குண்டாகும் நஷ்டத்திற்கும் பினல் கோர்ட்டு சட்டகுற்றத்திற்கும் உத்தரவாதிகளாவார்களென்பதைக் கவனிக்கக்கடவார்களாக.

இப்படிக்கு,

டி. கோபால் நாயகர்,

கோள்டன் பிரஸ், புரொப்ரைட்டர்,

17/18. காளத்தியப்பமுதலி வீதி, மதராஸ், என். சி.

உ

குமாரகுருபான் துணை.

வசிஷ்ட விஸ்வாமித்ரர் சம்வாதமாகிய

தர்க்கசோதிட மென்னும்

# கௌசிக சிந்தாமணி



## மூன்றும் பாகம்.

### காப்பு-வெண்பா.

ஆதிப்பொருளை யனுதினமுந் தான் பணிந்து
நீதிகுரு வசிஷ்டர் நேராக—மேதினியிற்
பெண்களுட சாதகத்தைப் பேசப் பலமுரைக்க
கண்ணுதலோ னீன்றகரி காப்பு.

### வசிஷ்டருக்கும் விஸ்வாமித்ரருக்கும் தர்க்கம்.

வசிஷ்டர் வாக்கு.

சீருறும்பெண்கள் சாதகமதனைச்
சிறப்புடன் பார்த்திடு முறைகேள்
பேருறும்புகர்சசி நின்றதோரடைவும்
பிறந்ததோர் லக்கினத்தடைவும்
நேருறாநன்றாய் நிலையதையறிந்தும்
நேர்ந்திடும்பலாபல மினைத்தும்
வாரிசூழ்புவியில் வாழ்குநர் தமக்கு
வகுத்தனர் வசிஷ்டரிப்படியாய். 1

விஸ்வாமித்ரர் வாக்கு.

வகுத்ததுசரியே வஞ்சியினுருவம்
வடிவமும் பார்த்திட வேண்டில்
தொகுத்திடுஞ் சென்மலக்கினத்தோடும்
துலங்குமேழாமிடங்கொண்டும்

பகுத்திடுமிந்துலக் கினம்பார்த்தும்
  பகர்குணம்பர்த்துரு நற்குணமும்
கருத்துடனிப்பலன் கண்டுரைப்பாயென
  கனதவக்கௌசிகருரைத்தார். 2

வதிஷ்டர் வாக்கு.

உரைத்ததுமுறையே அஷ்டமங்கொண்டு
  ஓதிடுமாங்கலியப் பலனும்
திருத்தமாமேழாமிடத்தினுற்சுகமும்
  திகழுறுங்கணவ னற்பலனும்
கருத்துடன்ஜன்ம லக்கினங்கொண்டுங்
  கருதுசீரத்துடனழகும்
குறித்திடுநலத்தால் புத்திரவிருத்திக்
  கூறெனர்வதிஷ்டரிப்படியாய். 3

விஸ்வாமித்திரர் வாக்கு.

கூறெனப்படியே கோட்களின்வவுயும்
  கூட்டமும்நாட்டமு மிடமும்
சீறெனயவர்க்குச் சிறந்திடுமனையும்
  செயவபசெயங்க ளாமனைத்தும்
நேறெனப்பகையும் நீசமுநட்பும்
  நிகழ்த்துஞ்சொச் சேத்திரமுச்சப்
பேறெனப்பார்த்துப் பலாபலமதனைப்
  பேருள்கொளசிகர் புகன்றார். 4

வதிஷ்டர் வாக்கு.

புகல்வதுகேந்திர மிலக்கினமுதலாய்
  புரியொன்றுநா லேழுபத்தும்
அகல்திரிகோண மைந்தொன்றுநலமாம்
  அதிற்பவமான தூர்த்தானமேகேளாய்
இகலுறுமிரண்டுமூன் றீசாறுமெட்டும்
  எழில்பதினொன் றுறுமாகும்
மகலுறுசுபஸ்தான கேந்திரதிரிகோணமா
  மாமெனர்வதிஷ்ட ரிப்படியாய். 5

விஸ்வாமித்திரர் வாக்கு.

மாமெனசுபக்கோளாவதுங் குருபுகர்
  மதிபுதனிவர்களேயாவர்
தாமெனும்பவக்கோளாவதுங்கேளாய்
  தருங்கதிர்சனி குஜன்பாம்பாம்

நாமெனும்பாவஸ்தானமேவெதுவெனில்
தற்பகை சீசமேயாகும்
தேமெனுஞ்சுபமா நட்புச்சமாச்சி
திகழ்குருவதிஷ்டருமுறைத்தார். 6

## ஜன்மவார பலன்கள்.

திகழ்கதிர்வாரம் ஜனிக்கினுமலது
தேன்மொழிருதுவே யாகினுங்கேள்
மகிழ்கீர்த்தியுடையாள் மாபுத்திசாலி
மாதவள்கணவனுக் கினியாள்
புகழ்காமிதேகம் மானிறமுடையாள்
புத்திரதோடம் பின்விருத்தி
அகழ்தருமுதலுங் கடையிலுங்கஷ்டம்
அணுகுமென்றுறைத்தன முனிதான். 7

## வதிஷ்டர் வாக்கு.

அணிகிடுமென்றவதின் பலன்கேளீர்
அவளுமேயூஷ்ண மாந்தேகி
கணிகையாங்காம மிகுந்தவளாகும்
கடினசொல்பதரும் வாக்குடையாள்
மணிமுகமண்டல நேத்திரங்களினும்
மறுவடையாள மொன்றுண்டு
தணிகையாமெத்த தயவுளாளாகும்
தானெனவுரைத்தனர் வதிஷ்டர். 8

## விஸ்வாமித்திரர் வாக்கு.

தானெனவுரைத்தப் பலனதுசரியே
தழைத்திடுஞ் சோமவாரத்தின்
தேனெனுமாதுதான் ஜெனித்திடினும்
திகழ்ருதுவாகினுங் கூறுய்
கானெனக்கனவன் கஷ்டங்கள்படவே
காட்டுமேயிவளுள மட்டும்
மானெனுமிவளுஞ் சென்றபின்யோகம்
மடுக்குமென கௌசிகருரைத்தார். 9

## வதிஷ்டர் வாக்கு.

மடுத்திடுஞ்சரியே மாதுமேவடிவாள்
மயிர்சீட்சியுள்ள வபிமானி
உடுத்திடுந்தேகதிடமதே யுடையாள்
வருகோய் சிலசிலகாளில்

கொடுத்திடும்பெண்மக னிலக்குமானிலாது
கூறும்பின் விருத்தியுமற்பம்
அடுத்தமாவெண்மை நிறைபணிவிச்சை
யாமெனர்வதிஷ்ட ரிப்படியாய். 10

விஸ்வாமித்திரர் வாக்கு.

வாமெனமங்கள வாரமாமதனில்
வனிதையர்செனிக்கினும் ருதுவானுலும்
தாமெனவர்னசேலை மேலிச்சை
தரித்ததோர் குடும்பமும்நாசம்
போமெனப்பொருளுஞ் சேதமேயடைவாள்
புத்திரர்சகோதரர் தோஷம்
நாமெனத்தரித்திரமுன் பின்யோகமுமாய்
நவின்றனர் கௌசிகர் தானும். 11

வதிஷ்டர் வாக்கு.

நவின்றதோர் புந்திவாரமாமதனில்
நங்கையர் செனிக்கினுமலது
கவின்ருதுவாகின் சம்போகபத்தியுளாள்
கனதயசாலியா யிருப்பள்
பயின்றதோர்கல்வி பட்சமேயுடையாள்
பண்பிலாமகவு பர்த்தாவழிநஷ்டம்
குவின்றபின்வயதினில் சுகமடைவாளெனக்
குறுமுனிவதிஷ்டரு முரைத்தார். 12

விஸ்வாமித்திரர் வாக்கு.

குருவாரமதனிற் செனிக்கினுமலதுகேள்
கோதையாள் ருதுவுமேயாகின்
பருவாகத்தன்னுலும் பர்த்தர்தன்னுலும்
பலித்திடுங்கல்விமுதல்யோகம்
திருத்தமாம்புத்தியற்பமாம்ரோகி
தேடுபொருள் புத்திரரையிழப்பள்
உருவமேவுயா முற்றமானிறமென
உரைத்தனர் கௌசிகர் தாமும். 13

வதிஷ்டர் வாக்கு.

உரைத்தவர்சுக்கிர வாரமாமதனில்
உருவையாள் ஜெனிக்கினுமலது
திருத்தமாய் ருதுவேயாகினும்யோகம்
திகழ்வஸ்திரபூஷண முடையாள்

பெருத்திடுஞ்செல்வம் புத்திரலாபம்
பேதையாள் லீலையில்விநோதி
கருத்துடன்புவியில் வாழ்குவளென்றும்
கயன்றனர்வதிஷ்ட ரிப்படியாய். 14

விஸ்வாமித்திரர் வாக்கு.

கயன்றவார்மந்தன் வாரமாமதனில்
கன்னியர் ஜெனிக்கினுமலது
நயன்றவார்ருதுவே யாகினும்ரோகி
நண்ணிடும் புத்திரதோஷம்
மயன்றலார்கணவற்கு மரிஷ்டமேசேரும்
மாபெருங் குடும்பமும்நாசம்
இயன்றவார்மந்த புத்தியேயுள்ளாள்
என்றுமேகௌசிக ருரைத்தார். 15

நட்சத்திர பலன்கள்.

வதிஷ்டர் வாக்கு.

உரைத்திடுமுனியே யின்னமுங்கேளாய்
உற்றதோ ரசுபதியதனில்
திருத்தமாய்மாது ஜெனிக்கினுமலது
திகழ்ருது வாகினுங்கூறுய்
வருத்தமாம்பாவத் தொழிலுமேசெய்வள்
வஞ்சியர் குறையுளசிரி
கருத்துடன்பிறருக் குபகாரியாமெனக்
கருதினர்வதிஷ்ட ரிப்படியாய். 16

விஸ்வாமித்திரர் வாக்கு.

கருதியவாறு கன்னியர்தாமும்
கணவனையிழப்பள் நடுவயதில்
அருதியாம்புத்திர தோஷமேயடைவள்
அறிவையாள் மெல்லியசிரி
குருதியாந்துர்க்குணி கூடியப்பொருளையுங்
குற்றமாம்விகாதத்திற் ரேர்ப்பாள்
தருதியாஞ்சவுக்கிய மனைத்தையுந்தோர்ப்பளென்
தவமுனிகௌசிக ருரைத்தார். 17

வதிஷ்டர் வாக்கு.

தவமெனும்பரணிதா னதிற்சொல்வேன்
தையலாள் ஜெனிக்கினுமலது
அவமெனருதுவே யாகினுங்கேளாய்
அன்னவள்சிர கனமுடையாள்

பவமெனமகவு தோஷமேயடைவள்
பலிக்கினும் பத்தாவையிழப்பள்
சவமெனபாலிய விதவையாமென்றே
சாற்றினர் வதிஷ்டரிப்படியாய். 18

விஸ்வாமித்திரர் வாக்கு.

சாற்றியபலனுஞ் சரிவரவின்னமும்
சாதகியாங் காரியாவள்
கூற்றனைப்போலும் கொடுமையுமுடையாள்
கோதையரெண்ணம் பலவிதமாம்
போற்றியமுன்னுங் கடையிலுந்தானும்
பொருந்திடும் பிரபலயோகம்
தோற்றியயெவரையும் நிகரனவென்பள்
தோஷியா மென்றனர்முனியும். 19

வதிஷ்டர் வாக்கு.

தோஷமேயல்லாற் கார்த்திகையதனில்
தோகையாள் ஜனிக்கினுமலது
வாசமாய்ருதுவே யாகினுங்கேளாய்
வஞ்சிமெய் காந்தியுமுடையாள்
நேசமாங்கணவன் றனக்குமேலாக
நீடியவதிகாரி செல்வி
பாசமாந்தனமு முடையவளாமெனப்
பகர்ந்தனர்வதிஷ்டரிப்படியாய். 20

விஸ்வாமித்திரர் வாக்கு.

பகர்ந்ததுசரியே பருந்தவமுனியே
பாவையர்க்கின்னமும் பலன்கேள்
மகிழ்ந்திடுங்குடும்ப நஷ்டமேநண்ணி
மாதவள்மரண துக்கியுமாம்
நகர்ந்திடுமூஷ்ண சரீரியாந்தியாகி
நவில்கல்விமானே யிச்சித்தடைகவள்
வகிர்ந்திடும்சென்ற நாள்முதல்யோகம்
வாமெனக்கௌசிக ருரைத்தார். 21

வதிஷ்டர் வாக்கு.

வாமெனரோகணி யாமதிற்கேளாய்
வஞ்சியர் செனிக்கினுமலது
தாமெனருதுவே யாகினும்ரூபி
தழல்விழி மயிறழகுடையாள்

நாமெனருசியில் பிரித்தியாளசாது
நண்ணிடுங்குடும்ப வழியினிற்செல்வம்
கோனெனநஷ்ட மடைந்துவின்சுகியெனக்
கூறினர்வதிஷ்ட ரிப்படியாய். 22

விஸ்வாமித்திரர் வாக்கு.

கூறியப்பலனில் குறையதைச்சொல்வேன்
குருமுனிவதிஷ்டரே கேளாய்
கோரியவஸ்திரா பரணலங்காரி
தோகையாள் கணவனுக்கிளையாள்
வீறியபோகி யாகியேவாழ்வள்
விளம்பிடும்மகவு தோஷமுமாம்
பாறியமேன்மை பாற்பாக்கியமுண்டெனப்
பதிலுரைகௌசிக ருரைத்தார். 23

வதிஸ்டர் வாக்கு.

பதியெனமிருக சீரமாமதனில்
பாவையர் ஜெனிக்கினுமலது
ததியெனும்ருதுவே யாகினுங்கேளாய்
தான்புத்திர லாபமேயடைவாள்
விதியெனவாயு ளற்பமாம்பின்பு
வேதையாங்கணவற்கு மரிஷ்டம்
நீதியெனப்பாற்பாக்கிய செல்லமுடையவளெனவு
நீட்டினர்வதிஷ்ட ரிப்படியாய். 24

விஸ்வாமித்திரர் வாக்கு.

நீட்டியவதிஷ்ட முனிவரேகேளாய்
நீடியப்பலனதை யின்னம்
தாட்டியாம்விகாத வழக்குமேயுடையாள்
தானமேபுரிவள் ஞானியாயிருப்பள்
தேட்டமாமடிகுத் தலைமயிற்சுருட்டை
திகழுறும்பிறந்த வழிவிருத்தி
மேட்டியாங்கணவன்மே லிச்சையுடையளென
மேன்மையாய் கௌசிகருரைத்தார். 25

வதிஷ்டர்வாக்கு.

மேன்மையாய்சொன்னக் கௌசிகமுனியே
மிகுந்திரு வாதிரையதனில்
தேன்மொழிஜென்ன மாகினுமலது
திகழ்ருது வாகினுங்கேளாய்

கான்மையாங்கணவன் வகைநஷ்டம்பிணியாம்
கலகமாங்குடும்பப் பகையாவள்
தின்புத்திரவிருத்தி யில்லாதவளாமென 26
திரைந்தனர் விதிஷ்டரிப்படியாய்.

விஸ்வாமித்திரர் வாக்கு.

திரைந்திடுபலன்கள் தெளிவதுசரியே
தேகத்தில்ரோகமே யுடையாள்
குறைந்திடும்வயது யாகவேயாகக்
குறுகினும்பொருள் பின்சுகமாம்
கரைந்திடுங்கலக்க முடையவள்கிலேசி
கருதியசுகமது மில்லாள்
பொருந்திடும்பெண்வழி யினிற்சுகமெனப் 27
புன்மையாய் கௌசிகருரைத்தார்.

வதிஷ்டர் வாக்கு.

புன்மையாயுரைத்தக் கௌசிகமுனியே
புனர்ப்பூச மாமதிற்கேளாய்
நன்மையாய்ஜெனன மாகினுமலது
நங்கையும் ருதுவாகிற்செல்வம்
பன்மையாமதிக மோகியாம்பிறரால்
பரிவுளதனவிருத்தி யடைவாள்
வன்மையாமதிகாரி யாயிருப்பாளென
வழுத்தினர்வதிஷ்ட ரிப்படியாய். 28

விஸ்வாமித்திரர் வாக்கு.

வழுத்தியவாறில் வரும்பலனின்ன
மறைகுவேன் வதிஷ்டரேகேளும்
சுழித்திடும்வெண்மைகளி லதிகவிச்சை
சூடுமுதல்விரண நோயுண்டாம்
செழித்தியப்பிறந்தவழி நஷ்டமேயடைவள்
சேரவேவிஷநோயு முண்டாம்
அழித்திடும் புத்திரதோஷமேயடைவளென
வருந்தவக் கௌசிகருரைத்தார். 29

வதிஷ்டர் வாக்கு.

அருந்தவக்கௌசிகா யறைகுவேன்கேளா
யானதோர் பூசமாமதனிற்
நிறைந்தருமாது ஜெனிக்கினுமலது
நீடிய ருதுவுமேயாகின்

திருந்தியவதிகருபமே யுடையாள்
இகழ்செல்வியெவர் மீதும்பிரியம்
வரும்புத்திவிசாலமே யுடையவளாமென
வகுத்தனர் வதிஷ்டரிப்படியாய் 30

விஸ்வாமித்திரர் வாக்கு.

வகுத்திடுந்தவத்தின் வதிஷ்டமாமுனியே
வரும்பலனின்னமுங் கேளாய்
தொகுத்திடும்பர்த்துரு பிதுர்வழியிரண்டில்
தோகையாள் பிரபலமடைவாள்
மிகுத்திடும் வஸ்திரபூஷணாபரணம்
வருஞ்சிறுமகவிச்சை யுடையாள்
பகுத்திடும்முன்பின் வயதினிற்சுகமாம்
பாரெனக் கௌசிகருரைத்தார். 31

வதிஷ்டர் வாக்கு.

பாரெனவுரைத்தக் கௌசிகமுனியே
பண்புறுமாயிலிய மதனிற்
சீரெனமாது ஜெனிக்கினுமலது
சிறக்கவே ருதுவுமேயாகில்
பெறெனப்புத்திர விருத்தியேயில்லாள்
பேசுமுன் கோபமேயுடையாள்
வீறெனச்சத்துரு வுடையவளாமென
விளம்பினர் வதிஷ்டரிப்படியாய். 32

விஸ்வாமித்திரர் வாக்கு.

விளம்பியவதிஷ்ட முனிவரேகேளாய்
வேதையாங் குடும்பத்திற்கலகம்
தளம்பெரும் நஷ்டவம்மிஷச்சயமும்
தானவளடைகுவ ளின்னம்
இளம்பியதேக விளர்ப்புடன்பிணியும்
கிட்டிடுங் கெர்ப்பதோஷமாம்பீடை
வளம்பெருங்கணவனு யுட்குப்பீடை
வருமெனகௌசிக ருரைத்தார். 33

வதிஷ்டர் வாக்கு.

வருமெனவுரைத்த கௌசிகமுனியே
வளர்மக நட்சத்திரமதனில்
தருமென மாதுசெனிக்கினுமலது
தான்ருதுவாகினுங் கேளாய்

பெருமெனபாலியமதிற் பிதாமுதலாய்
பேசிடுங்குடும்பமும் மரணம்
குருாமாமன முடையவளாமெனக்
கூறினர் வதிஷ்டரிப்படியாய். 34

விஸ்வாமித்திரர் வாக்கு.

கூறியமுனியே குறைபலன்கேளீர்
கோதையாளாருக்கு மஞ்சாள்
வீறியக்கணவன் புத்திரவிருத்தி
விளங்கிடா செல்வமுன்வயதில்
மீரியபின்வயதினிற் செல்வம்
மிக்கதோர் தனமதைப்படைப்பாள்
காரிழைசிலநாள் கஷ்டமுஞ்சுகமும்
காண்பளெனக் கௌசிகருரைத்தார். 35

வதிஷ்டர் வாக்கு.

காணவேயுரைத்த கௌசிகமுனியே
கருதியப் பூர்மாமதனில்
பூணவேமாது ஜெனிக்கினுமலது
பூவையாள் ருதுவதேயாகினுங்கேள்
வேணவேவுயர்சரீரமு மினைத்த
வடிவுடன் சிவப்பதாம்நிறமும்
தோணவேபோக சுகியுளமாதெனத்
தொகுத்தனர் வதிஷ்டரிப்படியாய். 36

விஸ்வாமித்திரர் வாக்கு.

தொகுத்திடும் வதிஷ்டமுனிவரேகேளும்
தோகையாள் மறுமணமலது
வருத்திடுங்காலப் புத்திரவிருத்தி
வழங்கிடுஞ் செல்வமுமுன்பாய்
பகுத்திடும்பின்பு சிலநாள்கஷ்டம்
பாவையாள் வந்ததோர்குடும்பம்
திகைத்திடக்ஷயமும் துக்கியுமாவளெனத்
திகழ்முனி கௌசிகருரைத்தார். 37

வதிஷ்டர் வாக்கு.

திகழெனவுரைத்தக் கௌசிகமுனியே
தெளிவுறுமுத்திர மதனில்
புகமுளமாதுப் பிறக்கினுமலது
பூர்க்கினுமதின் பலன்கேளாய்

தகமெனக்கணவன் வகைதனில்நஷ்டம்
தான்வருங் குடும்பத்திற்சேதம்
இகழ்மந்தபுத்தியினமு மாவளென்
றியம்பினர் வதிஷ்டரிப்படியாய். 38

விஸ்வாமித்திரர் வாக்கு.

இயம்பிடும் வதிஷ்டமுனிவரேகேளாய்
இம்மாது பெருத்ததோர்தேகி
நயம்பெறயோகி மோகியாகிதனம்
நண்ணியபிரபல முடையாள்
வயமென வம்சயோகத்துதித்தவள்
வரும்புத்திர விருத்தியுமடைவள்
செயமெனபர்த்தூர்க்குச் செல்வம்விருத்திக்குமெனச்
சீர்தவக்கௌசிக ருரைத்தார். 39

வதிஷ்டர் வாக்கு.

சீர்தவகௌசிக முனிவரேகேளீர்
செயமுள அஸ்தமாமதனில்
பேர்வாமாதுப் பிறக்கினுமலது
பெட்புறருதுவது வாகின்
ஏர்தருமானி யெழில்ரூபவதியாள்
இஷ்டமாஞ் செல்வமுமுடையாள்
ஊர்தரும்பர்த்தா விருத்தியுள்ளாளென
உரைத்தனர் வதிஷ்டரிப்படியாய். 40

விஸ்வாமித்திரர் வாக்கு.

உரைத்திடும் வதிஷ்டமுனிவரேயதனில்
ஒதுவேனொருபல னுகந்தே
பொருத்திடும்புத்திர தோஷமேயடைவள்
புருஷனுர்குடும்பமும் க்ஷயமாம்
வருத்தமாம்பல்வகை கவலையுமுடையாள்
வாடியக்ஷீண மாஞ்சரீரி
திருத்தமாம்புத்திதா னவனலாளெனத்
திடமுடன் கௌசிகருரைத்தார். 41

வதிஷ்டர் வாக்கு.

திடமுடனுரைத்த கௌசிகமுனியே
திகழ்சித்திரை நட்சத்திரமதனில்
வடிவுளவாது வருகினுஞ்செனன
மல்லதிருதுவதே யாகினுங்கேள்

அடைவுடன்பர்த்துரு வம்மிசசுஷயமும்
அடைகுவள் விவாதமேபுரிவள்
கடியெனக்கடூரிகாண் மிருக்கோபியெனக்
கணித்தனர் வதிஷ்டரிப்படியாய். 42

விஸ்வாமித்திரர்வாக்கு.

கணித்திடும் வதிஷ்டமுனிவரேகேளீர்
கன்னியாள் பந்திற்குமாநாள்
துணித்திடுமீனக் காரியமதனில்
தோகையாள் பிறவேசியாவள்
தணித்திடுமுன்சுகம் பின் துக்கமடைவள்
தரித்திரப் பீடையுமுண்டாம்
வணித்திடும்ரூபக் குறையுளாளென்றே
வண்மையாய் கௌசிகருரைத்தார். 43

வதிஷ்டர் வாக்கு.

வண்மையாயுரைத்த கௌசிகமுனியே
வாகுள சுவாதியிற்றானும்
பெண்ணவள்தானுஞ் செனிக்கினுமலது
பேரிருதுவாகினுங் கேளாய்
கண்மையாம் ரூபவதியுளக்காந்தி
கருதுஞ் சந்தோஷியாயிருப்பள்
பண்மையாம்புத்திர நஷ்டமுள்ளாளெனப்
பகர்ந்தனர் வதிஷ்டரிப்படியாய். 44

விஸ்வாமித்திரர் வாக்கு.

பகர்ந்ததோர் வதிஷ்டப்பெருந்தவமுனியே
பாவையின் பலனின்னமுங்கேளாய்
உகர்ந்திடுந்தியாகி யுத்தமகுணத்தள்
ஓங்கிமேலாகியே வாழ்வள்
தகர்ந்திடுங்கணவன் தனக்குநல்கீர்த்தி
தழைத்திடுஞ் செல்வியுமாவள்
அகர்ந்திடுந்தெய்வ பக்தியுள்ளாளென
அதிதவகௌசிக ருரைத்தார். 45

வதிஷ்டர் வாக்கு.

அதிதவகௌசிக முனிவரேகேளாய்
ஆனதோர் விசாகமாமதனில்
மதிமுகமாது செனிக்கினுமலது
மாருதுவாகினும் பாராய்

பதியெனப் புத்திரயோகமுஞ்செல்வம்
பெருந்தன விருத்தியுமுடையாள்
நதியெனஸ்திரமாம் புத்தியுள்ளாளெனத்
தான்கூற வதிஷ்டரிப்படியாய். 46

விஸ்வாமித்திரர் வாக்கு.

தானெனக்கூறும் வதிஷ்டமாமுனியே
தரும்பலனின்ன முங்கேளாய்
நானெனும்வாக்கு விருத்தியுமுடையாள்
நண்ணியவதி காரியாவள்
தேனெனக்கணவன் தனக்கனுக்கூலி
திகழன்பு முடையவளாவள்
கோனெனயோக முடையவளாமெனக்
கோசிகமுனிவரு முரைத்தார். 47

வதிஷ்டர் வாக்கு.

கோசிகமுனியே கூறுவேன்கேளாய்
குறித்திடுங் கேட்டையாமதனில்
தோஷமாமாது ஜனிக்கினுமலது
துலங்கவே ருதுவதுவாகில்
கூசியவம்ச க்ஷயமதையடைவள்
குற்றமாம் பர்த்தாவிற்கரிஷ்டம்
வாசமாமங்கை விதவையாகுவளென
வரைந்தனர் வதிஷ்டரிப்படியாய் 48

விஸ்வாமித்திரர் வாக்கு.

வரைந்ததுசரியே வதிஷ்டமாமுனியே
வாய்ந்திடும் ரோகமேயுடையாள்
இரைந்திடுமீன முடையவளாகினும்
யோகமுன் வயதினிலடைந்து
குறைந்திடும் பின்னால்தரித்திரமடைவள்
கோபியாம் ரூபமுங்குறையாள்
விரைந்திடவற்ப வாழ்வுளாளென்றே
விண்டிடக் கௌசிகருரைத்தார். 49

வதிஷ்டர் வாக்கு.

விண்டதோர்கௌசிக முனிவரேகேளாய்
விளங்கிய மூலமாமதனில்
கண்டதோர்மாது செனிக்கினுமலது
காணிருதுவாகினும் பாராய்

பண்டுளதேகக் காந்தியுமுடையாள்
பெருகிடும்புத்திரவிருத்தி
செண்டுளசெல்வ முடையவளாமெனச்
செப்பினர் வதிஷ்டரிப்படியாய். 50

விஸ்வாமித்திரர் வாக்கு.

செப்பிடும் வதிஷ்டசீர் தவமுனியே
செயல்பல னின்னமுங்கேளாய்
தப்பிடுஞ்சிலநாள் வருந்தியேபிணியால்
தான்புத்திரதோடமு மடைவள்
ஒப்பிலாக்கணவன் பகைக்குதுக்காதியாய்
ஓங்கிடும் மத்தியவயதில்
மெப்பிடுமங்கிலியக் குறையடைவாளென
வெதிர்பலன் கௌசிகருரைத்தார். 51

வதிஷ்டர்வாக்கு.

எதிற்பலனுரைத்த கௌசிகாகேளாய்
மேன்மையாம் பூராடமதனில்
கதிற்பெருமாது செனிக்கினுமலது
கருதிய ருதுவதுவாகில்
செதுர்ப்பெரும் பாற்பசுபாக்கியத்தோடு
செல்வமும் மேன்மையுமடைவள்
சதுருளவெவர்க்கும் நலமுளாளென்றே
சாற்றினர் வதிஷ்டரிப்படியாய். 52

விஸ்வாமித்திரர் வாக்கு.

சாற்றிய வதிஷ்டமுனிவரேகேளாய்
சரிபலனின்னமும் புகல்வேன்
போற்றியகணகன் வகைநாசமும்பர்த்தா
புகழ்வகை பிரபலமடைவள்
தேற்றியமிகவு மதிகாரியேயாவள்
திகழ்போகமோகி யதிரூபி
ஏற்றியதரும மியற்கையாளென்றே
இருடியாங் கௌசிகருரைத்தார். 53

வதிஷ்டர்வாக்கு.

இருடியேகேளா யுத்திராடந்தனில்
எழில்மாது செனிக்கினுமலது
தருமெனருதுவேயாகில் தயவுடையாள்
தக்கதோர்குணமு மிக்கவாங்கல்வி

மருடையசெல்வப் பெருக்குமனப்பூர்த்தி
மத்தியவயதினி லடைவாள்
பெண்மெனப்புத்தி விஸ்தீர்ணமாமெனப்
பேசினர்வதிஷ்ட ரிப்படியாய். 54

### விஸ்வாமித்திரர் வாக்கு.

பேசியவதிஷ்ட முனிவரேயதனில்
பெறும்பல னின்னமுங்கேளாய்
நேரியாமாசியல்லது மன்னரை
நிகாதாம் பெயர்களைமணப்பள்
வாசியாந்தியாகி யெவரையுங்காப்பள்
அழகுளாள் மயிர்சுருண்டிருக்கும்
பாசமாம்விழிலட்சண முடையாளெனப்
பண்மையாய்க்கௌசிகருரைத்தார். 55

### வதிஷ்டர் வாக்கு.

பண்மையாயுரைத்தக் கௌசிகமுனியே
பகர்திருவோண மாமதினில்
தண்மையாய்மாது செனிக்கினுமலது
தான்றுதுவாகினுங் கேளாய்
உண்மையாந்தெய்வப் பக்தியுமுள்ளான்
உயரமாஞ்சரீரி பொதுநிறமுடையாள்
வண்மையாங்கியாதி பெருகுவளிவளென
வரைந்தனர் வதிஷ்டரிப்படியாய். 56

### விஸ்வாமித்திரர் வாக்கு.

வரைந்ததுசரியே வதிஷ்டரேகேளாய்
வழுத்துவேனதின் பலனின்னம்
சிரந்திடும்வஸ்திரா பரணப்பிரியாள்
செப்பிடும் வாக்குமேவிருத்தி
புரிந்திடும்பற்பல தொழிலுமேபுரிவள்
புத்தியுமேன்மையு முடையாள்
நிரைந்திடுஞ்செல்வமும் நஷ்டமுமடைவளென
நிலைபடகௌசிக ருரைத்தார். 57

### வதிஷ்டர் வாக்கு.

நிலைபடவுரைத்த கௌசிகமுனியே
நீடியவவிட்டமா மதனில்
வலைபடமாது செனிக்கினுமலநருது
வாகினுமதுவுமே கேளாய்

தலைபடசெனித்தவிடமி யோகமுடையாள்
தக்கதோர் செல்வமும்பொருளும்
புலைபடபாவியர்தனி லனுபவிப்பளென
புகன்றனர் வதிஷ்டரிப்படியாய். 58

விஸ்வாமித்திரர் வாக்கு.

புகன்றதோர் வதிஷ்டமுனிவரேகேளாய்
புகழ்செல்வஞ் சிலகாலமிருந்து
அகன்றுமேசிலகாலம் வருந்தியுமிளைப்பள்
அன்புளாள்கணவன் மேல்பட்சம்
உகன்றுமேபுத்திரசேதமே யடைவள்
ஊக்கமாம் பிணியற்பமுடையள்
நகன்றிடுங்கிலேசமா யிருப்பாளதை
நற்றவக்கௌசிக ருரைத்தார். 59

வதிஷ்டர் வாக்கு.

நற்றவர்கௌசிக முனிவரேகேளாய்
நவின்றிடுஞ் சதையமாமதனில்
பற்றியேமாது செனிக்கினுமலது
பைங்கொடி ருதுவுமேயாகில்
புத்திரதோஷமாகியே முன்னும்
புகலொணுதரித்திர மடைவள்
சுற்றமாங்கணவன் றனக்கடங்காளெனச்
சொல்லினர் வதிஷ்டரிப்படியாய். 60

விஸ்வாமித்திரர் வாக்கு.

சொல்லியவதிஷ்ட முனிவரேகேளாய்
சூழ்ந்திடுமதின் பலனின்னம்
வல்லதோர்குடும்ப விருத்தியுங்குறையும்
வருமோகி போகியுமாவள்
செல்வமும்சுகமும் பின்வயதிலடைவள்
செப்பிடுங்கருமை நிறங்கலந்தசரீரி
புல்லவேகீர்த்திப் பெற்றுமேவாழ்வளெனப்
பூட்டமாய் கௌசிகருரைத்தார். 61

வதிஷ்டர் வாக்கு.

பூட்டமாயுரைத்தக் கௌசிகாகேளாய்
பூரட்டாதியா மதனில்
நாட்டமாய்மாது செனிக்கினுமலது
நவிலக்கேள் ருதுவுமேயாகில்.

கூட்டமாங்குடும்பர் தாய்வழிச்செல்வம்
கூடிடும் பாற்பாக்கியமும்
நீட்டுஞ்சந்ததியுடன் மங்கிலியவிருத்தியென
நிகழ்த்தினர் வதிஷ்டரிப்படியாய். 62

விஸ்வாமித்திரர் வாக்கு.

நிகழ்த்திய வதிஷ்டமுனிவரேகேளாய்
நீள்பலனின்னமுஞ் சொல்வேன்
புகழ்தனயோகப் பிரபலமுடையாள்
புத்தியுங் கல்வியுமேலாள்
திகழ்த்தியயாவற்கு மேலாளுமாகி
தேன்மொழி பிரியமுமுள்ளாள்
மகிழ்வஸ்திராபரண பூஷணமுடையளென
மாதவக்கௌசிக ருரைத்தார். 63

வதிஷ்டர் வாக்கு.

மாதவக்கௌசிக முனிவரேகேளாய்
மகிழுத்திரட்டாதி யதனில்
போதவேமாது ஜெனிக்கினுமலது
புஷ்பவதியாகினும் பாராய்
ஏதவள்தேகக் காந்தியுமுடையாள்
யெழில் சுதசரீரியுமாவள்
ஓதவேபாலிய செல்வியுமாவளென்
றுரைத்தனர் வதிஷ்டரிப்படியாய். 64

விஸ்வாமித்திரர் வாக்கு.

உரைத்ததுசரியே வதிஷ்டமாமுனியே
உளல்பலனதிகமுண் டின்னங்கேளாய்
திருத்தமாய்ப்பிறந்த வியத்தினிற்செல்வம்
திகழ்தனலாபம் பாற்பாக்கியம்
பொருத்தமாய்ப்புத்திர விருத்தியும்பெறுவள்
போய்பர்த்துரு குடும்பமேசேர்ந்து
வருத்தமாய்ப்பின்வயதில் கஷ்டமடைவளென
வாகுடன்கௌசிக ருரைத்தார். 65

வதிஷ்டர் வாக்கு.

வாகுடனுரைத்த கௌசிகமுனியே
வழித்தியரேவதி யதனில்
பாகுடன்பாவை செனிக்கினுமலது
பண்புடன் ருதுவுமேயாகில்

தோகுடன்மிகவும் பாக்கியமுடையாள்
துலங்கிடுஞ் செல்விமனோதைரி
ஏகுடன்ருபலாவண்ணிய முள்ளாளென
இயம்பினர் வதிஷ்டரிப்படியாய். 66

விஸ்வாமித்திரர் வாக்கு.

இயம்பியவதிஷ்ட முனிவரேசரிதான்
இயம்புவேனின்னமும் பலன்கேள்
நயம்பெறும்சரீசப்பெல முடன்காந்தியு
நண்ணுமோகன வதியாவள்
வயம்பெறகணவற்கு தனலாபயோகமும்
வாய்க்கும்புத்திர சோடுவாழ்வள்
ஜெயம்பெறசுகமுஞ் செல்வமுமுண்டெனச்
சித்தமாய்க் கௌசிகருரைத்தார். 67

நட்சத்திரபலாபலன் முற்றிற்று.

---

## இலக்கின பலன்கள்.

---

மேஷலக்கினபலன்.

வேறு-விருத்தம்.

வதிஷ்டர் வாக்கு.

கருதியேகேட்கவந்த கௌசிகமுனியேகேளாய்
உருதியாமேஷந்தன்னி லுதிக்கினும்ருதுவானாலுந்
திருதியேவந்தமாதின் றேகமும்திருவின்வர்ணம்
அருதியாம்புத்திரதோஷ மடைகுவாளறிகுவாயே. 68

விஸ்வாமித்திரர் வாக்கு.

அறியவேயுரைக்கவாய்ந்த யருந்தவமுனிவதிஷ்டா
சிறந்திடுங்குலந்தனக்குச் சேயிழைமூத்தோளாவள்
புறியவேயனேகமன்னர் பூஜிதமுடையமாது
நிறைந்திடுங்கல்விகீர்த்தி நீள்சமசரீரியாகும் 69

வதிஸ்டர் வாக்கு.

ஆகுமென்றெதிர்த்துரைத்த அருமையாமுனியேகேளாய்
பாகமாயிடபந்தன்னில் பிறக்கினும்ருதுவேபார்க்கில்
வாகுமேதனமுங்கல்வி வஸ்திராபரணஞ்செல்வம்
ஏகமானாருமோங்கி யெழிலுடன்வாழ்வாள்பாரே. 70

விஸ்வாமித்திரர் வாக்கு.

பாரெனப்பகர்ந்ததற்கு பதிற்சொலுமுனிவதிஷ்டா
நேரெனமேன்மையுள்ளான் நீடிடுங்குடும்பமேலாய்
கூறெனக்குணமுமுள்ளாள் குலவிடும்புத்திரதோஷம்
பேரெனப்புத்திகல்கி பெரும்புகழுடையாளென்னே. 71

வதிஷ்டர் வாக்கு.

என்னவேகேட்கவந்த இருடிகௌசிகனேகேளாய்
மின்னியமிதுனந்தன்னி லுதிக்கினும்ருதுவேமேவில
கன்னிலட்சணமேயுள்ளாள் காமியாமதிகபோகி
பின்னும்பெண்பிரஜைதன்னை பெறுவளேயதிகமாக. 72

விஸ்வாமித்திரர் வாக்கு.

அதிகமாம்பெண்பாலென்று அறைந்திடுமுனிவதிஷ்டா
விதியதாம்வயதுபத்தில் வேதையாமவள்தனக்கு
பதியவேயோகமுண்டாம் பர்த்துருக்குப்பிடைகாட்டும்
ததியதாய்சுகமுங்கஷ்டம் தானுகுமென்றுபேசே. 73

வதிஷ்டர் வாக்கு.

பேசுமென்றுரைக்கவந்த பிரபலமுனியேகேளாய்
வாசமாய்கடகந்தன்னில் வருகினும்ருதுவேயாகின்
கூசுமென்மிருதுவாக்கு கோதைசஞ்சாரியாவள்
நேசமாங்கல்விகற்பள் நீடுபிரபலமாம்விருத்தி. 74

விஸ்வாமித்திரர் வாக்கு.

விருத்தியாமென்றுசொன்ன விளங்கியமுனிவதிஷ்டா
பெருத்திடும்புத்திரப்பேறு பேணிநாச்செல்வம்போகம்
திருத்தமாய்பணியும்வஸ்திரம் திகழும்நற்பேருங்கீர்த்தி
பொருத்தமாய்பெற்றுவாழ்வள் பூவையாள்புவியிற்றனே. 75

வதிஷ்டர் வாக்கு.

தானெனவெதிர்த்துப்பேசுந் தவக்கௌசிகனேகேளாய்
தேனெனசிங்கந்தன்னில் செனிக்கினும்ருதுவேயாகின்
மானெனப்பெரியோர் நேசிமகிழ்ந்திடபுத்திமேலாள்
கோனெனசிரத்தையோடு கோரியபக்தியுள்ளாள். 76

விஸ்வாமித்திரர் வாக்கு.

உள்ளவேபலன்கடன்னை யோதியமுனிவதிஷ்டா
விள்ளவுத்தியோகபத்தி விளங்கிடுங்கல்விசித்தி

தெள்ளியகணவனுக்குத்தான் பிணிவந்துதீரும்
அள்ளியபுத்திரதோஷ மடைகுவளென்றுசொல்லே. 77

வதிஸ்டர் வாக்கு.

சொல்லெனக்கேட்கவந்த கௌசிகாகேளாய்நீயே
வல்லவேகன்னிதன்னில் வருகினும்ருதுவேயாகின்
மெல்லியுங்கணவன்மீது மெத்தவும்பத்தியுள்ளாள்
செல்வமும்யோகமுள்ளாள் சிறந்திடுந்தனமென்றோதே. 78

விஸ்வாமித்திரர் வாக்கு.

ஈதுமென்றெனக்குரைத்த வுற்றதோர்முனிவதிஷ்டா
மாதவள்கல்விபுத்தி மகிழ்கீர்த்தித்திறமையுள்ளாள்
போதவேமணிபொன்னுடை புகழுடன்வந்துசேரும்
ஈதவேயனேகர்தானு மிவட்கனுகூலங்காணே. 79

வதிஷ்டர் வாக்கு.

காணுமென்றெனக்குரைத்த கௌசிகாவின்னுங்கேளாய்
பூணவேதுலாத்திற்றானும் பிறக்கினும்புட்பித்தாலும்
தோணவேதொழில்கள்யாவும் தொகுப்புடன்செய்விலேகி
காணிடாளெவர்க்குநல்லாள் நற்புத்தியுடையாள்கூறே. 80

விஸ்வாமித்திரர் வாக்கு.

கூறுவதுசரியேயின்னங் குறையுண்டுக்கேள்வதிஷ்டா
நேர்ந்திடுங்குடும்பகஷ்டம் நீடியப்பத்தாவோடு
வோர்ந்திடும்புத்திரதோஷ முற்றிடும்பின்னுல்புத்திரர்
ஆர்ந்திடவதர்ம்மியாகி யடைவள்பின்தரித்திரங்கள். 81

வதிஷ்டர் வாக்கு.

தரித்திரமடைவளென்று சாற்றுங்கௌசிகனேகேளாய்
விருட்சிகமதனிற்றானும் வருகினும்ருதுவேமேவில்
பொருத்தமேகணவர்க்கில்லை புகலுஞ்சொற்கபடியாவள்
பெருத்ததோர்சரீரியாவள் பேதையாள்கருமைரூபி. 82

விஸ்வாமித்திரர் வாக்கு.

கருமையென்றுரைக்கவந்த கனதவமுனிவதிஷ்டா
வரும்புத்திரநஷ்டமோடு வவள்பொருள்சேதமாகும்
தரும்பத்தாவழியுந்தீதாம் தான்பயங்காமேயில்லாள்
பெருகியகுரூபியாவள் பெருஞ்சுகமடையமாட்டாள். 83

வதிஷ்டர் வாக்கு.

மாட்டாளென்றெடுத்துரைத்த மகாகௌசிகனேகேளாய்
வாட்டமாந்தனுவிற்றுனும் வருகினும்ருதுவேயாகின்
றேட்டமாம்முகவசிகரம் திகழ்பெலமுளசரிரி
நாட்டமாந்தனமேலிச்சை நற்பிரபலமுள்ளாள். 84

விஸ்வாமித்திரர் வாக்கு.

உள்ளவள்சரியேயென்று வோதியமுனிவதிஷ்டா
கள்ளவஞ்சகமேயுள்ளாள் கனபோகமாகிவாழ்வள்
விள்ளவள்குடும்பம்ரண்டில் விளங்கியதனமுமுள்ளாள்
கொள்ளுமுன்புத்திரதோஷம் கூறிம்பின்லாபமுண்டாம். 85

வதிஷ்டர் வாக்கு.

உண்டாகுமென்றுசொன்னவொண் கௌசிகனேகேளாய்
விண்டதோர்மகரந்தன்னில் வருகினும்ருதுவேயாகின்
கொண்டதோர்கணவனுக்குந் தனக்குமேசுகங்கொடாதாள்
பண்டுளகுடும்பந்தன்னில் பகையுடன்கிலேசியாமே. 86

விஸ்வாமித்திரர் வாக்கு.

ஆமெனப்பலனுரைத்த யருந்தவமுனிவதிஷ்டா
தாமெனும்பிணியும்பாதை தெய்வத்தால்சிலாளுண்டாம்
சேமெனும்யோகமுண்டாம் செனித்திடந்தரித்திரமாகும்
வேமெனுங்கஷ்டம்சேர்ந்து விதவையாய்மரிப்பள்தானே. 87

வதிஷ்டர் வாக்கு.

மரிப்பளென்றுரைக்கவந்த மன்னனேகௌசிகாகேள்
உருப்படிக்கும்பந்தன்னில் யுதிக்கினும்ருதுவேயாகின்
குறிப்படியதிகமோகி கோதையாள்தரித்திரியாவள்
தெறிப்புடனிந்தமாதுதேகமுந் திடமுள்ளாளே. 88

விஸ்வாமித்திரர் வாக்கு.

திடமுடனெடுத்துரைத்தத் திகழ்தவமுனிவதிஷ்டா
அடவுடன்செல்வம்நீடியரும் பாக்கியமுடையளாவள்
தடமுளமனக்கிலேசித்தாமதக் குணமேயுள்ளாள்
மடமெனும்புத்திராலே மனத்துயரடைவாள்பாரே. 89

வதிஷ்டர் வாக்கு.

மனத்துயரடைவளென்ற மகாகௌசிகனேகேளாய்
வனத்துடன்மீனந்தன்னில் வருகினும்ருதுவேயாகின்

தனத்துடன்செல்வமோடு தான்குடும்பவிருத்தியாவள்
கனத்துடன்மேன்மையாகி கணவற்குச்சுகமும்நீடும். 90

## விஸ்வாமித்திரர் வாக்கு.

நீடவேயுரைத்துவந்த நிகழ்குறுமுனிவசிஷ்டா
தேடவேதந்தைவர்க்கம் தான்விருத்தியாகவோங்கும்
வாடிடுங்கணவன்வர்க்கம் வரும்பலசிரேஷ்டமுள்ளான்
கூடிடும்சுகமும்புத்திரர் குலவிருத்தியாகவாழ்வள். 91

## வசிஷ்டர் வாக்கு.

### வேறு-விருத்தம்.

வாழ்வளெனவுரைத்த கௌசிகனேகேளாய்
வாரணுடசொக்ஷேத்திர வீடதான
சூழ்மந்தமேஷவிருட் சிகத்தில்மாது
தோன்றிடினுமல்லதுகேள் ருதுவேதோற்றில்
ஆழ்கவேயம்புலியும் புகரோன்தானும்
அடைவாகத்தனுகும்பம் மீன்தேள்நண்டில்
மீழ்கவேயிருக்க பகைபாபர்கூட
மொழிகுவேன்நோக்க மிலாதிருக்கக்கேளே. 92

## இதுவுமது.

இருக்கவேபொன்ன வனுங்கூடத்தானும்
எழில்கேந்திரகோணமதி லிருக்கிலேனும்
பெருக்கவேபுகரோனும் பெலவானுகி
பிறைகேந்திரமல்லதுகேள் லக்கினகேந்திரம்
உருக்கமுடன்தானிருக்க வின்னுங்கேளு
ஓதுமிரண்டெராறெட்டிற்றுனும்
வருக்கமாம்கதிர்குஜன் சனியும்பாம்பு
மமர்ந்திருக்கநோக்கில்லாதிருக்கப்பாரே. 93

## இதுவுமது.

பார்க்கவேழா மிடமுஞ்சுத்தமாகி
பகாக்கேளல்லததில் சுபரேநிற்க
தீர்க்கமாஞ்சாதகமே யானுள்தானும்
திகழ்ரூபலாவண்ணிய வதியுமாகி
ஏர்க்கவேபிரபலமாங் குடும்பந்தானும்
இவளாலேகணவனுக்குஞ் செல்வமுண்டாம்
கோர்க்கவேபுகழோடுத் துதியுங்கீர்த்தி
கூடிவந்தனுகுமெனக்கூறுவாயே. 94

### விஸ்வாமித்திரர் வாக்கு.

கூறுமெனக்குறித்த குருமுனிவஷிஷ்டா
கோதையற்குமாடு மனைபூமிசெல்வம்
பாருமெனராஜவதிகார மெல்லாம்
பாலியத்திலே யிவளும்படைத்துவாழ்வள்
நேருமிவ்விதக் கோட்களுடனேகேளாய்
நெருங்கிசனிமுதல் பாலர்கூடில்நோக்கில்
சிருமெனசெல்வமின்றி சிலநாள்வாதை
சிந்தையதுகலங்கி துயரடைவாள்தானே. 95

### வஷிஷ்டர் வாக்கு.

தானெனவேயுரைத்த கௌசிகனேகேளாய்
தடையாகப்பாபிகள் மாத்திரமேதோன்றி
நானெனவேமேற்குறித்தப் பாவந்தன்னில்
நண்ணியேதானிருக்க வந்தமாது
தேனெனவேதேகதிட மில்லாளாகும்
திகழாகச்சம செல்வம்திருத்தமாகும்
ஏனெனவேயெக்காலும் வருந்திதானும்
இளைப்பளெனசாதகிக்கு யெடுத்துப்பேசே. 96

### விஸ்வாமித்திரர் வாக்கு.

பேசுமெனத்தானுரைத்த முனிவஷிஷ்டா
பெண்ணவளுஞ் சனியமிசமாகத்தோன்றில்
வாசமுருந்தநியோகந் தனமுஞ்செல்வம்
வளமாகவாசருக்குச் சமானமில்லாள்
நேசமுருமெத்தொழிலுமே லோங்காது
நேரிழையாள் கருநிறத்தாள்ரூபமில்லாள்
தோஷமாம்மந்த புத்தியுள்ளாளாகி
தூலமாம்சரீரமொடு காண்பாள்பாரே. 97

### வஷிஷ்டர் வாக்கு.

பாரெனவுரைத்த கௌசிகனேகேளாய்
பாவையர்க்கு வாயுளதுகுறைவுமாகும்
கூறெனவேமகவுதோஷ மனுபவிப்பள்
கோதையர்தன்காற்றைகளுட னவயவத்தும்
நேரெனவேகுறை யுமடையாளமுண்டாம்
நங்கையவளுன முள்ளாள்நவிலக்கேளு
பேரெனவேகணவனுக்கு யோகபங்கம்
பெற்றிடவேவாழ்வளெனப் புகன்றேன்காணே. 98

விஸ்வாமித்திரர் வாக்கு.

காணவேசெல்வாயங் கிசமேயாகி
கன்னியவள் செனிக்கினும்ருது வேகாணில்
நாணவேமங்கிலிய தோஷந்தானும்
நண்ணிடும்பாலியத்தில் நங்கையற்கு
பூணவேபுகலொணு தூர்க்குணியுமாவள்
பூமாதுசெம்மை நிறமுடையாளாவள்
தோணவேகுடும்ப நஷ்டமாவதோடு
தோகையவள்சோகமது வுடையாளென்னே. 99

வதிஷ்டர் வாக்கு.

என்னவேசொன்ன கௌசிகனேகேளாய்
எழிலானவம்மாதுக் கியம்பக்கேளு
மன்னியமகவற்ப லாபமாகும்
அவ்விதவற்பமுள்ளாள் மத்தியத்தில்
கன்னவேமரணமது வாகப்போவள்
காசினியில்மிக்கதோர் வாழ்வுமில்லை
பன்னியவற்பதன முடையாளாகும்
பழியுள்ளோளாவளெனப் பகர்ந்திட்டேனே. 100

விஸ்வாமித்திரர் வாக்கு.

பகர்ந்திட்டேனெனவுரைத்த முனிவதிஷ்டா
பாபிகள்முன் கூறியதானத்திருந்தும்
வகிர்ந்தசனியங்கிசமே வந்தமாது
வருந்தும்பலதுக்கமுமே யுடையாளாகி
தகர்ந்திட்டதரித்திரமும் தனமுநஷ்டம்
தானுகிபழையபொருள் செல்வமும்போம்
இகர்ந்திட்டவரூபிகுல வீணியாகி
இருப்பளேமனே விசாரங்கொண்டே. 101

வதிஷ்டர் வாக்கு.

கொண்டெனவுரைத்த கௌசிகனேகேளாய்
குறித்தகோள்மேற் சொன்னவிடமிருக்
கண்டிடவேபிறந்தவளும் வியாதியாலும்
காணுமகதோஷமொடு பர்த்தர்தோஷம்
உண்டாகிவைதவ்விய வதியாய்வருந்தி
யேயாததுயரமதைக் கொண்டிளைப்பள்
பண்டாகுங்குடும்பத்தாற் சோகமாகி
பாலவயருந்தானிருந்துப் பொருந்துவாளே. 102

### விஸ்வாமித்திரர் வாக்கு.

பொருந்துவாளென வுரைத்தமுனிவதிஷ்டா
புகன்றபடிமுன்சொன்ன சுபஸ்தானத்தில்
நிறைந்தகுருவங்கிசமுங் கூடவேறில்
நீள்கன்னியவள் பிறக்கநாட்டின்மீது
சிறந்தனமாடமா ளிகையினோடு
சோவேயடிமைசெல்வச் செருக்குமுண்டாய்
புரிந்திடுவாள்மகவுதோஷ மொன்றேதானும்
பூவையற்குமற்ற வெல்லாம்பெருகும்பாரே. 103

### வதிஷ்டர் வாக்கு.

பெருகுமெனவுரைத்த கௌசிகனேகேளாய்
பெண்ணவளும் சுக்ரொரங்கிசத்தில்
வருகினுமல்லதுகேள் ருதுவேயாகில்
வனிதையவள் சுமங்கலியாய்மரணமாவள்
தருகுமேபிரபலமாம் வாழ்வுஞ்செல்வம்
தானுண்டாம் பொருளோடுபூஷணாதி
அருளுமேதானுண்டா மதிகபுத்தி
அரிவையற்குவிளங்கு மெனவறிகுவாயே. 104

### விஸ்வாமித்திரர் வாக்கு.

அறியவேயுரைத்திட்ட முனிவதிஷ்டா
அம்மாதுக்கின்னம் வெகுபலனேவுண்டு
தெறியவேவெண்மை வஸ்திரப்பிரியமுள்ளாள்
தேவியிவள் தன்னாலே கணவனுக்கும்
புறியவேநாட்குநாள் யோகம்மீடி
புகழாகவாகனமும் அடிமைகூடும்
நிறையவேபாற்பசுவும் பெருகிநீடும்
நேசமுடன்கீர்த்தியதுப் பெற்றுவாழ்வள். 105

### வதிஷ்டர் வாக்கு.

பெற்றிடுவாளென வுரைத்தகௌசிகாகேள்
பெண்ணவளும் புந்தியுடவங்கிசத்தில்
பற்றிவரிலல்லது கேளருதுவேயாகின்
பலகலையுமோதவல்லாள் ஞானியாவாள்
சுற்றமுடன்யாவருமே புகழ்வார்காண
சூழுவேபாபராகின் யோகமற்பம்
குற்றமாம்புத்திரியா யிரந்தேயுண்பள்
குறையாகக்கணவனுக்கு வாயுள்குன்றும். 106

விஸ்வாமித்திரர் வாக்கு.

குன்றுமெனவுரைத்த குருமுனியேகேளாய்
குஜனுடையவங்கிசத்தில் மாதுதானும்
கன்றுகஜெனித்திடினும் ருதுவேயாகின்
கன்னியவள்பலவினத் தொழிலேசெய்வள்
நின்றுபலபேரையுமே விரோதங்கொள்வள்
நிடும்நல்லயவதில் மங்கலியாய்போவள்
என்றும்துக்கமுடைய தரித்திரியேயாவள்
இப்பலனுக்கெதிருண்டோ யியம்புவாயே. 107

வதிஷ்டர் வாக்கு.

இயம்புமென்று வுரைத்தகௌசிகனேகேளா
யெழில்மாதுதனக்கு பலனின்னங்கேளு
நயம்பெறவேகுஜனங் கிசமாகிட்டாலும்
நல்லவர்கள்பார்வை யுறுத்தானுண்டாகில்
வயம்பெறவேவஞ்சியர்க்கு தோஷம்நீங்கு
மமங்கலியாளாவது வும்மாறிப்போகும்
ஜெயம்பெறுவாள் தரித்திரமுமணிகிடாது
செப்பினேன்செகமறிய சீராய்த்தானே. 108

விஸ்வாமித்திரர் வாக்கு.

சீராகத்தானுரைத்த முனிவதிஷ்டா
செப்பக்கேள்குருபுக ரங்கிசத்தில்மாது
நேராகசெனித்திடினும் ருதுவேயாகின்
நெருங்காதுவவள் தனக்குவிசேஷசெல்வம்
பேரானப்புகழும் நற்குணியுமாவள்
பெட்புறவேதெய்வ பக்தியுள்ளசிலி
கூரானபுத்தியுளாள் குடும்பியாவள்
குறித்திட்டேனிப்பலனைக் குறிப்பாய்த்தானே. 109

வதிஷ்டர் வாக்கு.

குறியெனவேயுரைத்திட்ட கௌசிகனேகேளாய்
கோதையர்க்குப்பலனின்னங் கூறுவேன்பாராய்
நெறியாகசந்ததியுமதிக முள்ளாள்
நீடியநன்னெறி அதிகமுள்ளமாது
கறியெனசெல்வகுறை யுடையோனான
கணவனையேமணப்ப ளெனக்கண்டுகொள்ளு
அறியவேபின்னற்ப செல்வமுண்டாய்
அனுபவிப்பாளெனப் பலனையறிந்துபேசே. 110

### விஸ்வாமித்திரர் வாக்கு.

பேசவேபுந்தி யங்கிசமேயாகிப்
பெண்ணவளுந்ஜெனிக்கினும் ருதுவேயாகின்
வாசமாங்கல்விமுதல் சகலந்தானும்
வஞ்சியவள்கற்றுணர்ந்து கீர்த்திகொள்வள்
நேசமாயெல்லோர்க்கும் நல்லோளாவள்
நெருங்கியபந்தனுவும் மெத்தவுண்டு
தோஷமாம்கணவனுக்குந் துரோகஞ்செய்வள்
தோன்றுமேயிவளாலே பழியுந்தானே. 111

### வதிஷ்டர் வாக்கு.

பழியெனவுரைத்த கௌசிகனேகேளாய்
பாவையரும்பாபுருஷ னிச்சையுள்ளாள்
வழியாகவல்லது கேளந்தமாதும்
வஞ்சிப்பாள்பல புருஷராலேசெல்வம்
அழியெனவேமகவு தோஷந்தானுமுண்டு
அடுத்ததோர் மனத்துயருமகன்றிடாது
ஒழியவேபந்துகட்கு விரோதியாவள்
உற்றபலனுரைத்திட்டே னுண்மைதானே. 112

### விஸ்வாமித்திரர் வாக்கு.

உண்மையெனத்தா னுரைத்தமுனிவதிஷ்டா
ஓதக்கேள்சுபர்பாப க்ஷேத்திரத்தும்
தண்மையுறுந்தகர் கன்னிமிதுனந்தேள்மான்
தன்னிலேயிவர்களுமே தாமிருந்து
வண்மையுள்ளபொன்புகர் புந்தியென்னும்
வளமானவிவர்களுட வங்கிசத்தில்
நன்மையாய் ஜெனிக்கினும்பெண்ருதுவேயாகின்
நங்கையட்குவென்னபலன் சொல்லுவாயே. 113

### வதிஷ்டர் வாக்கு.

சொல்லுமெனக்கேட்ட கௌசிகனேகேளாய்
சோர்ந்துபூர்வபிதுர் வம்சதனமுமின்றி
புல்லுமெனகொடித்தவளா யாகிபின்பு
புத்திரர்கள்பத்தாவால் யோகம்நீடி
செல்வமுடன்கிருகம் வாகனமும்பூமி
சேரவதிகார செயத்துடனேவாழ்வள்
வல்லவளாய்மகளோடு செல்வம்நீடி
வர்த்திக்குமெனப் பலனை வறைந்திடாயே. 114

### விஸ்வாமித்திரர் வாக்கு.

வரைந்திட்டென வுரைத்திட்ட முனிவதிஷ்டா
வரும்பாபர் சனிகுஜ னங்கிசமேயாகிப்
பிடிந்திடினும் பெண்ணவளும்ரு துவேயாகின்
பேசரியவம்மாது புவியின்மீது
நிறைந்திடவேகாணும் பலன்நேரதாக
நீட்டியகணிதவகை நிலையைக்கண்டு
சிறக்கிடவேயெனக் கெதிராய்சீரதாக
செப்பிடுவாய்யொப்புறவே செகத்தின்மீதே. 115

### வதிஷ்டர் வாக்கு.

மீதெனவேயெனக் கேட்டகௌசிகாகேள்
மெல்லியளுக்காயுள் குன்றும்விதவையாவள்
போதவேவியாதியஸ்தி புத்திரசோகி
பூவையவள் வுருவகினிதரித்திரமுள்ளாள்
ஏதலேயின்குடும்ப விகாதந்தன்னால்
இவள்தனக்கும்தனலாப மியற்கையாகி
வாதெளவே யாவர்களுந் துஷ்டியென்ன
வஞ்சியரும்துர்ச்செய்கை செய்வாள்பாரே. 116

### விஸ்வாமித்திரர் வாக்கு.

பாரெனவேதானுரைத்த முனிவதிஷ்டா
பரிவாகமேற்புகன்ற ராசிலேனும்
சேரெனவேமேற்சொல்லிய க்ஷேத்திரத்தும்
செப்பியப்படியவர்கள் தாமிருந்து
பேரெனவேசுபக்கோ ளங்கிசமேயாகிப்
பெண்ணவளும் செனித்திடினுமல்லதுகேள்
சீரெனவேருதுவுமேயாகில்மாது
சித்தமுடனப்பலனைத் தெரியவிள்ளே. 117

### வதிஷ்டர் வாக்கு.

விள்ளுமெனவுரைத்த கௌசிகனேகேளாய்
விளங்கியவினிமகா தரித்திரியாவள்
தெள்ளியக்குலத்தினுக்கும் ரூபியாவாள்
திகழும்நற்குணமுடைய மேன்மையுள்ளாள்
தள்ளவேசிலகாலம் தரித்திரியாகி
தான்பின்புசுகமதுவே யடைந்திட்டாலும்
உள்ளதோர்கடையில் வைதவ்வியமாவள்
உள்ளதோர்கணவன் வகையிலிருக்கும்பாரே. 118

### விஸ்வாமித்திரர் வாக்கு.

இனக்குமெனவுரைக்க வந்தமுனிவதிஷ்டா
இயம்பக்கேள்பாப ரங்கிசமேயாகின்
பினக்கவேயதற்பாயு ளுடையோனாகி
பிசாசுப்போ லுருவமதுக் கொண்டோனாவன்
கனக்கவேகணவனையு மரிக்கச்செய்வன்
கடுமையாங்குணமுள்ளான் றானுமாகித்
தினக்கவேயனேகவித விகாதமுண்டாய்
கீர்த்திய றுத்தப்பு மெனப்புகலுவாயே. 119

### வதிஷ்டர் வாக்கு.

புகலுமெனவுரைத்த கௌசிகனேகேளாய்
பொன்னவன் தன்னங் கிசமேதானுமாகி
அகலவவ்வங்கிசங்காண வேதுவான்
அக்கிரகம்பாவ பகையோரேயாகின்
இகலவேயசுர்குலத் துதித்திட்டாலும்
யேந்திழையாள் கிருதியனுசாரியாயும்
தகலவேபலரையுமே யிழந்துபின்னால்
தாலியிழந்துபரகுலத்தில் சேர்வாள்பாரே. 120

### விஸ்வாமித்திரர் வாக்கு.

சேர்வளெனவுரைத்திட்ட முனிவதிஷ்டா
சுபமித்துருவங்கிசமே யாகத்தோன்றில்
பேர்வளரநல்லோக்கிய வடிவாளாகி
பெட்புறவேயரசனுக்குச் சமானமான
கார்வளரக்கணவனையே மணந்துமாது
கன்னியவள்மிகமேலாய் பிரபலத்தோடு
ஏர்வளரவெக்கால மிருந்துவோங்கி
யெழிலாகவாழ்வளென வியம்புவாயே. 121

### வதிஷ்டர் வாக்கு.

இயம்புவாயெனவுரைத்த கௌசிகாகேள்
யேந்திழையாள் சுக்கிரனங்கிசமாய்த்தோன்றில்
சயம்பெறவே அசனசயனபோகபாக்கியம்
சாரவேயோகியாகி மேலாம்பதவியோடு
நயம்பெறவேதனத்தையுமே விரயஞ்செய்வள்
நங்கையவள்மகவின்றி மிகதவிப்பள்
வயம்பெறவேசுமங்கலியு மாகத்தானும்
வாழ்நாளை தான்கழித்துமரணமாவள். 122

## விஸ்வாமித்திரர் வாக்கு.

ஆவளெனவுரைத்திட்ட முனிவதிஷ்டா
அன்னவளுபுதாங்கிச மாகத்தோன்றில்
தாவளெனவிரகதியானி போலொத்தும்
தையலவள்வைத்திய முதல்தொழிலுஞ்செய்து
போவளெனப்பிரபவித்தும் புவியின்மீது
புகலும்பலவிஷையாதி துருதியாகி
காவளெனவிப்புவியி லெவருங்காண
கன்னியவள் வாழ்ந்திருப்பாள்கண்டுபேசே. 123

## வதிஷ்டர் வாக்கு.

கண்டுபேசுமென வுரைத்தக்கௌசிகாகேள்
கன்னியருகுமத்திபமாம் வயதில்தானும்
விண்டபடிவைதவ்வியம் வந்துதீரும்
விளங்கிடாபுத்திர தோஷமுண்டாம்
அண்டியேதொழில்புரிந்து யேவல்செய்யும்
அன்னவளுந்தாதியர் தானுமாகும்
கொண்டிடத்தனக்குமெள்ள வாழ்வுமில்லை
கோதையர்க்கு விப்பலனைக்குறிப்பாய்க்கூறே. 124

## விஸ்வாமித்திரர் வாக்கு.

குறிப்பாகக்கூறுமென்ற முனிவதிஷ்டா
கூறக்கேள்கன்னி யங்கிசமாகத்தோன்றில்
ஒளிப்பாகயொருவர்கட்குத் தாதியாகி
யுள்ளபலபேரையுமே வசியஞ்செய்து
இறுப்பாகமேலான விடமிருந்தும்
எழில்ராஜஸ்திரீகளுக்கு விஷ்டாளாகி
தறிப்பாகவிராஜயோகந் தானடைந்து
தையலவள்வாழ்வளெனச் சாற்றுவாயே. 125

## வதிஷ்டர் வாக்கு.

சாற்றுவாயெனவுரைத்த கௌசிகாகேள்
சரிபலனின்னமுந்தான் சொல்வேன்பார்
தேற்றவேயனேகதன மார்ச்சித்தேதான்
திகழாகக்கணவனையு மகிழச்செய்வாள்
தோற்றவேயிச்சனி முதலாயானோர்
துலங்குமச்சப் பிரதானக்கிரகத்திற்கு
வற்றவேவிரோதியா கிற்றுருடியாகி
இம்சையாற்தெண்டனைக் குட்படுவள்பாரே. 126

### விஸ்வாமித்திரர் வாக்கு.

படுவளெனவுரைத்திட்ட முனிவதிஷ்டா
பாவையவள்குருஜனங்கிச மித்திருவாய்தோன்றில்
தொடுவளெனபூமியதி காரமேன்மை
தொகுக்கினும் பலசெண்ணம்போல்நடப்பள்
நடுவளெனவனேகதனம் நன்றாய்ச்சேர்ப்பள்
நாட்டிலுள்ளோர்புகழ பிரபலமேயாவள்
விடுவளெனவெகுபேர்க்கு முதவிசெய்வள்
விபரமாயிதின்பலனை விரித்திட்டேனே. 127

### வதிஷ்டர் வாக்கு.

விரித்திட்டேனென வுரைத்தகௌசிகாகேள்
விளங்குமிந்த மாதுசெல்வவதியானாலும்
பிரித்திட்டமங்கியம் உரோணத்தையுந்தான்
பேசும்விவாகத்தோடு அவக்கியாதியாலும்
குரித்திட்டயௌவன வயதேயுள்ள
குமரனெனும் பெண்ணேனுங்கூறக்கேளு
திரித்திட்டமாகவே வளர்த்துத்தாலும்
தென்னவனுக்கிட்டு துயரடைகுவாளே. 128

## ஜாதகி ஆயுள்பாவம்.

---

### விஸ்வாமித்திரர் வாக்கு.

அடைகுவாளெனவுரைத்த முனிவதிஷ்டா
ஆறலொடுபொன்புந்தி சனியின்நால்வர்
உடையசுபக்ஷேத்திர கேந்திரகோணத்தும்
உச்சவாட்சியல்லது நட்புற்றாலுந்தா
வடிவாகவிருந்து குருவாங்கிசமேயேனும்
வல்லசனியங்கிச மாகவந்தாள்
படிவாகவிகைநான்குக் கோளிற்றாலும்
பற்றில்மூவர்சுபாங்கிசமே யாயுள்கூறே. 129

### வதிஷ்டர் வாக்கு.

கூறுமெனவுரைத்திட்ட கௌசிகாகேள்
கோதையர்க்குவயத்துவும் நூறேயாகும்
பாறுமெனமூவர்வலுத்துப் பாங்கிசமாகின்
பாவைபர்த்துருபாமாயு ளெழுபத்தைந்தாம்
தேறுமெனவலுத்திருவ ரதிலொருவர்
தீயாய்சுபாம்சமுறி லைம்பதாகும்

நேறுமெனப்பாபராகின் நாலெட்டாகும்
சேர்ந்தொருவரோவலுத்து சுபராகிற்கேள். 130

இதுவுமது.

கேளேச்சுபருறில் கிளரிருபத்தைந்தாம்
ஆளெனச்சுபர்பாப ரம்சமுறிற்பதினெட்டாம்
தாளெனப்பாபரே பாபாம்சமேயுறின்
வாளெனப்பனிரெண்டு வயதெனவிளம்பே. 131

## கணவன் ஆயுட்பாவம்.

---

### விஸ்வாமித்திரர் வாக்கு.

விளம்புமெனவுரைத்திட்ட முனிவதிஷ்டா
மேவசுரகுருதேவ குருசேய்மூவர்
வளம்பெறக்கேந்திர கோணமல்லதுங்கேள்
வாழ்வியமாந்தனத்திலேனும் சுபத்திலேனும்
கிளம்பவேஅஷ்ட மிரண்டேழிற்றானும்
கேகயன்சுன்பாம்பு பின்றியிருக்கிலேனும்
தளம்பெறவே பொன்னோக்கிவலுக்கிலேனுந்
தான்குறித்தமூவர் சுபக்ஷேத்திரமேறி 132

இதுவுமது.

ஏறியேபாபரைக் கூடாமற்றானும்
எழில்குருவங்கிசத்தில் மூவர்நிற்கில்
கூறியக்கணவனுக்கே வயதுநூறும்
குவலயத்தில்பிரபல வந்தனவன்
மீறிடவனேகமாட மாளிகட்டி
மிக்கவடிவ்மகளுட னதிகாரம்பெற்று
தேறிடவேசந்தயு மிகவுண்டாகத்
தேசமன்னர் தனக்குசமன்கீர்த்தியுள்ளோன். 13

### வதிஷ்டர் வாக்கு.

கீர்த்தியுளோரெனவுரைத்த வதிஷ்டாகேள்
கிளர்புந்தி புகாம்சமாகத்தோன்றில்
கேர்த்தியுளக்கணவனையுந் தான்மணப்பள்
நேரிழையும் திரவியத்தில்மேலாளாகி
பூர்த்தியாய்வயதுகாற்பாள் வரையினுக்குத்தான்
புருஷனுக்குவாயுள் தீர்க்கத்துடனேவாழ்வள்

சேர்ந்தியாஞ்செல்வமது யுடையோளாகி
  சினேகிதத்தால் பிரபலமுங்கீர்த்தியுண்டாம் 134

விஸ்வாமித்திரர் வாக்கு.

உண்டாகுமெனவுரைத்த முனிவதிஷ்டா
  உற்றகுஜன் சனியங்கிசமாகத்தோன்றில்
பண்டாகப்பழுத்த கிழமாகத்தான்
  பாவையவள் கணவனையுந்தானிழப்பள்
விண்டாண்டுமுப்பதுக்குள் விதவையாவள்
  விளங்காதுவாழ்வதுவுங் குன்றிப்போகும்
கண்டதோர்யகவுக்குந் தோஷமுண்டாம்
  காசினியில்யோகமது இல்லாளாமே. 135

வதிஷ்டர் வாக்கு.

இல்லையெனவுரைத்திட்ட கௌசிகாகேள்
  இயம்பியமூவரி விருவர்மாத்திரம்
அல்லவேவலுத்து அன்னியோன்னியராகி
  அவர்களுமேசுபாங்கிச மாகவேறில்
புல்லவேகணவனுபுள் நாற்பதாகும்
  புகழ்பாலியகால் மின்றிப்பின்காலத்தில்
சொல்லவேசுகமோடு தனமுஞ்செல்வம்
  சுற்றமுடன்பெற்றுலகில் வாழ்வாள்கூறே. 136

விஸ்வாமித்திரர் வாக்கு.

கூறவேஇரண்டு கோள்தான்பெலத்து
  கொடும்பாபாங்கிசமே யேறிநிற்கில்
நேறவேபாலியத்தில் பத்தாவைதோற்பள்
  மீடியமகவுண்டு பத்தாவைதோற்பள்
தேறவேபாக்கியத்துடனே வாழ்வள்
  தீங்காகவாண்டுபதி னாறுக்குள்தான்
பேறெனவேகணுவனையுந் தானிழப்பாள்
  பெண்ணுகுமென்றுலகில் பேசுவாயே. 137

வதிஷ்டர் வாக்கு.

பேசுமெனவுரைத்திட்டக் கௌசிகாகேள்
  பெட்புறவேமேற்குறித்த மூன்றுகோளில்
வாசமெனவொருவனுமே தான்பெலத்து
  மற்றவர்கள்பெலன்குறைந்து சுபாங்கிசமேறில்
நேசமுறுமீராறு வாண்டுமட்டும்
  நிலைக்கவேகணவனுபுள் விருத்தியுள்ளாள்

கூசாமல்தவயோக முடையோளாகி
குவலயத்தில்மேன்மையுடன் வாழ்வாள்தானே. 138

விஸ்வாமித்திரர் வாக்கு.

வாழ்வனெனவுரைத்திட்ட முனிவசிஷ்டா
வரும்பாபாங்கிசமே தானுமாகில்
தாழ்வனெனவருடமது ஐந்தினுக்குள்
தன்கணவனுயுளது முடிவதாகும்
சூழ்வனெனவிவாகமுத லறுப்புக்கூலி
சுற்றமுடன்தனமதுவும் பெற்றுவாழ்வள்
மீன்கொணுபலவகையாம் வருத்தந்தன்னை
மெல்லியளும்பெற்று துயரடைகுவாளே. 139

வசிஷ்டர் வாக்கு.

அடைவனெனவுரைத்திட்ட கௌசிகாகேள்
அவைகளிலும் குஜனுடையங்கிசமாகி
திடமாககுஜன்வலுத்து முன்சொல்வண்ணம்
தேறியேநின்றிடினு மெட்டுமூன்றில்
வடைவாககுஜனுடன் குஜனைபொத்த
வளமிலாபாபிக ளிருவர்கூடின்
தடையாகப்பார்த்திடினு மல்லதுகேள்
தக்கவெட்டாமிடம் பாபர்வீடதாகி 140

இதுவுமது.

வீடாகவாக்கினிலே சனிபாம்பூர
விளங்குசுபசம்பந்த திருஷ்டியோங்க
கேடாககன்னியர்க்கு விவாகத்தோடே
கிட்டியகணவன்சுக மிலேயிழப்பள்
கூடாதுகணவனுயுள் குறைவாகும்
கோதையர்க்குச்சுகமில்லே குற்றமாவள்
வாடிடவேபலவகையாம் வருத்தமுண்டாம்
வஞ்சியர்க்குமிப்பலனை வகுத்திடாயே. 141

விஸ்வாமித்திரர் வாக்கு.

வகுத்திடுமெனவுரைத்த முனிவசிஷ்டா
வரையக்கேளவ்விதப்பாவியோடே
புகசோனுமலதுமதி தானுங்கூடில்
பூவையவள்பலரையுமே தான்மணப்பள்
பகுத்திட்டமற்றொரு விவாகம்பூண்பள்
பார்க்கவிரண்டுமூன்று கணவனைமணப்பள்

மகத்துவமாம்வர்களாயுள் தன்னைக்கண்டு
மங்கையவள்பின்னாக மரிப்பள்பாரே. 142

வதிஷ்டர் வாக்கு.

மரிப்பளெனவுரைத்திட்ட வதிஷ்டாகேளு
மாகொடியரொன்றுமந்தப் பாவர்தானும்
சரியெட்டுவிரண்டிடத்திலிருக்கிலேனும்
சாற்றுமவ்வதிபர்பகை நீசர்பாபர்
கூரியக்ஷேத்திரத்தில் பாபியோடும்
கூடிடினும்சுபர்பார்வை யில்லாதாகின்
கோரியவக்கணவனுக்கு யோகபங்கம்
கோதைதாலிபூண்டவுடன் மரிப்பள்றானே. 143

விஸ்வாமித்திரர் வாக்கு.

தானெனவேயுரைத்திட்ட முனிவதிஷ்டா
தான்மூன்றுமிடத்ததிப னேடேயாயின்
கானெனவேமூன்றுமிடந் தன்னிலேனும்
நாடிபுந்திசனியிவர்கள் கூடிடினும்
ஏனெனவேவேறுசுபர் திருஷ்டியற்றும்
இருக்கசம்பந்தமின்னி புதனும்மந்தன்
கானெனவேயவர்களி னங்கிசமேயாகி
கன்னியருந்தோன்றபலன் கருதுவாயே. 144

வதிஷ்டர் வாக்கு.

கருதுவாயெனவுரைத்த கௌசிகாகேள்
காதலியாள்போகத்தி லிச்சையில்லாள்
உறுதியாயொருவரையு மணக்கமாட்டாள்
உற்றவிரகத்தில்சித்த பிரமைபோலும்
பருதியுபுத்தியதுவுள்ளாள்போலும்
பேதையவள்மடித்திறப்பள் பாரின்மீது
அறுதியாமிவள்தனக்கு யோகமற்பம்
ஆகுமெனவிப்பலனை யறைந்திடாயே. 145

விஸ்வாமித்திரர் வாக்கு.

அறைந்திடென வுரைத்திட்டமுனிவதிஷ்டா
அடைவாகவுரைத்திட்ட விவர்களோடு
நிறைந்திடெனகுஜன்கூடி குஜாங்கிசமேறில்
நீடுஞ்சிலகாலுமது கூலியாகி
கறைந்திடனக்கணவனையுந் தானிழப்பள்
கன்னிசித்தபிரமையினல் வாடிநிற்பள்

குறைந்திடவேலியாதியினல் துன்பமாகி
கோதையவள்வருத்தமுற்றழல்வாள்காணே. 146

## மேஷவிருச்சிக லக்கினங்களிற் பிறந்த ஜாதகத்தின் புத்திரயோகாவ யோகபலன்.

காணவேகுருவலது சந்திரன்றனும்
கடகஞ்சிம்மம்தனு மீனமிவைகடன்னில்
தோனுஞ்சனிபுதன்ராகு முதலாம்பாபர்
துணைசோராசுபர்களுடன் றனும்கூடி
வேணவேயல்லதுகே னிவரேதானும்
விளங்கவேதனித்துமே தானிருக்கின்
பூணவேஜெனித்திடினும் ருதுவேயாகின்
பூவையற்குவரும்பலனை புகலுவாயே. 147

### வதிஷ்டர் வாக்கு.

புகலுவாயெனக்கேட்ட கௌசிகாகேள்
புத்திரர்யிரண்டினுக்கு மேலாளுரும்
அகலவேபலபுத்திர லாபந்தன்னை
அரிவையரும் பாவியயௌவனத்தில்
இகலவேயிப்பருவம் வயதுயீராறு
இயற்கையாமுதற் கொண்டேபுத்திரவிருத்தி
தகலவேதானடைந்து இந்தமாதும்
நாணிமிசைவாழ்வளெனச் சாற்றினேனே. 148

### விஸ்வாமித்திரர் வாக்கு.

சாற்றினேனெனவுரைத்த முனிவதிஷ்டா
சதுராகமேற்குறித்த கிரகமான
வேற்றியகுரு சந்திரனுடனேயாதல்
எழில்கடகம்மின்சிலை சிம்பத்திலாதல்
போற்றியக்கதிரவனுங் குஜனுர்தானும்
பொருந்தியேதான் கூடியேயிருக்கில்
தோற்றும்புத்திரர்முன் நசித்துப்பின்னுண்டாகும்
துலங்குமதிவாண்பிரஜை யதிகமாமே. 149

### விஸ்வாமித்திரர் வாக்கு.

ஆகுமெனவுரைத்திட்ட கௌசிகாகேள்
அரும்புகரும்புதன்கூடில் பெண்ணதிகம்
தாருமெனபுருஷ சந்ததியேயன்றில்
தழைக்காது தாவுமே யற்பமாகும்

போகுமென சனிபாம்பு பொருந்திச்சேரில்
புத்திரர்கள் புத்திரிகளுண்டாகித்தான்
ஏகுமெனவெமனுக்கே யிரையாமென்றே
ஏந்திழைக்குவிப்பலனை யியம்புவாயே. 150

விஸ்வாமித்திரர் வாக்கு.

இயம்புமெனவுரைத்திட்ட முனிவதிஷ்டா
ஏற்கையாய்முன்கண்ட பொன்னொடிக்கு
நயம்பெறவேசனிபாம்பு புதனோடேதான்
நாடிகூடியாவதுவே நவிலக்கேளு
வயம்பெறவான் தகர்குடமான் தேள்கன்னி
வாட்டமுடனிருந்துபாப பெலனும்பெற்றும்
செயம்பெறவே தனுகோல்தேள்மீனுமிந்த
செருமையுமிராசிகளில் செப்பக்கேளே. 151

இதுவுமது.

செப்பியசனிபாம்பு செவ்வாயிந்த
செயலிலாபாபக் கோளிவர்கடம்மில்
கொம்மாகவெவரேனும் நின்றிடினும்
குருமுதல்சுபகோள் பெலமற்றிருக்கில்
மெய்யாகஜெனித்திடினும் ருதுவேயாகின்
மெல்லியர்க்கு புத்திரபலமில்லையில்லை
தப்புறவேஜெனிக்கினு மந்தபுத்திரர்
தானிலைக்காதே மரணமாகும்பாரே. 152

வதிஷ்டர் வாக்கு.

பாரெனவுரைத்திட்ட கௌசிகாகேள்
பரிவாகச்சசியலது சுக்கிரன்கூடில்
கூடெனவே காலதாமதத்தின்மேலே
கோதையர்க்கு ஒருபுத்திரலாபமுண்டாம்
பேறெனவேகுருசந்திரன் பெலமேதாழ
பேசுகவிமீன் தனுசுசிம்மங்கண்டில்
சீரெனவேபெலக்க சுபரவரைப்பார்க்க
சித்திக்கும்பெண்மகவும் புத்திரரில்லை 153

விஸ்வாமித்திரர் வாக்கு.

இல்லையெனவுரைத்திட்ட முனிவதிஷ்டா
இரவியாவது புந்தியாவதுசேரில்
வல்லபுத்திரசந்ததியும் விருத்தியாகும்
வரையக்கேள்சனிபாம்பு முதனேறும்

புல்லமேற்கூறிய விடத்திலேறில்
புத்திரர்களே விருத்தியில்லாமற்றான்
அல்லலாய்நின் றிடுவா ளந்தமாதும்
அவனிதனிலிப்பலனை யறிந்துபேசே. 154

வதிஷ்டர் வாக்கு.

பேசுமெனவுரைத்திட்ட கௌசிகாகேள்
பேதையரும் ஸ்திரீகாரபுத்திரராலே
வாசமாய்கர்மபாத்திதையு முண்டாம்
வரையக்கே ளவ்விதகிக்ரகந்தானும்
தோஷமாய்பகைநீச க்ஷேத்திரத்தை
சூழ்ந்தடையிலிம்மாதுத் தனக்குத்தானும்
நேசமுறுபுத்திர விருத்தியில்லை
நேரிழையாள் தனக்கென் று நிகழ்த்துவாயே. 155

விஸ்வாமித்திரர் வாக்கு.

நிகழ்த்துவாயெனவிரைத்த முனிவதிஷ்டா
நீடியகுருசந்திர னிவர்கள் தானும்
மகிழ்வாகவெக்கிர வங்கிசந்தன்னில்
மருவியேயிருக்கின்ற கோட்கட்குற்ற
புகழாகும்பெலாபெலத்திற் கேற்றதான
பொருந்தியகிரணமதின் றன்தொகையும்
திகழாககுருசந்திர னிவர்களோடும்
சேர்ந்தகோள்பெலாபெல மெண்ணும்பார்த்து. 156

இதுவுமது.

பார்த்துகணியெடுத்து பொன்பெலனுக்குள்ள
பரிவாகவெண்பேர்க்கு கொடுத்துவந்த
பூர்த்தியீவுசுபகோளால் கண்டசங்கை
புருஷபுத்திரர்க ளென் றுந்தானுணர்ந்து
நேர்த்தியாய்ச்சசிபலன் முன்போனுமீந்தி
நின்றதோரிவுபெண்பால் தாயென்றும்
சேர்த்தியாய்பாம்புசனி முதற்பாபிக்கும்
செப்புவாய்புத்திர க்ஷயமென் றுதானே. 157

விஸ்வாமித்திரர் வாக்கு.

தானென் றுவுரைத்திட்ட கௌசிகர்கேள்
தானத்திற்குருசந்திரன் பெலன்கள்தன்னை
ஏனென் றுர்தனித்தனியே யவரவர்கள்
எண்களால்பெருக்கி யொன்பதிற்கழித்த

நாமெனன்றசேஷமதை தானறிந்தும்
நடக்கின்றதசாபுத்தி தன்னில்தானும்
கோனென்றபுத்திராலாபக் காலமென்றும்
குறிப்பாகக்கண்டறிந்துக் கூறுவாயே. 158

விஸ்வாமித்திரர் வாக்கு.

கூறுவாயெனவுரைத்த முனிவதிஷ்டா
குருசந்திரனிவர்களிலே யெவர்களேனும்
ஏறவேகுருசெவ்வா யங்கிசமேறில்
எழில்புத்திரர்யோக வல்லவர்களாகி
மீறுமேகிரகமுடன் காலிபூமி
மிக்கதோர்க்ஷேத்திரமும் விருத்தியாகும்
தேறவேமேலானக் கீர்த்தியோடும்
தேயத்தில்வாழ்வரெனத் தெரியச்சாற்றே. 159

வதிஷ்டர் வாக்கு.

சாற்றுமெனவுரைத்திட்ட கௌசிகாகேள்
சார்ந்துமேபுந்திபுக ரங்கிசமேறில்
நேர்த்தியாய்வித்தையில் வல்லோர்களாகி
நீடியேசமயோக மடைந்துவாழ்வர்
யேற்றுமெனமேற்கண்ட சசிபொன்மந்தன்
யங்கிசமேயடைய புத்திரசோகத்தோடு
தோற்றுமெனப்பலவாறாய் வருத்தமுற்று
துக்கமுமடைவனெனத் தொகுத்திடாயே. 160

விஸ்வாமித்திரர் வாக்கு.

தொகுத்திடெனவுரைத்திட்ட முனிவதிஷ்டா
தோன்றியயோகாவ யோகத்திற்கும்
புகர்மதியோன் பொன்னிந்தமுவர் தானும்
பொருந்திவிடை நண்டுதனுமீனமிந்த
அகந்தபவத்தனிலிருந்து மவ்விடங்க
ளவர்தனுக்குவிரோதபாப க்ஷேத்திரமின்றி
பகுத்தபாபபகையோர்கள் கூடப்பார்க்க
பாவையற்யில்லாதிருக்கில் பலன்சொல்வாயே. 161

வதிஷ்டர் வாக்கு.

பலன்சொல்வாயெனக்கேட்ட கௌசிகாகேள்
பாவையவள்பத்தாவை யடைந்தநாளாய்
நலன்மிக்கக்கணவனுக்கு விசேஷமாக
ராஜயோகமில்லா திவள்கூடச்சேர்ந்து

கலனன் றிஸிரகவாகனம் சம்பத்துக்
காணவேமிக்கதோர் கீர்த்தியோடு
விலகாதவிவ்விதப் பிரபலமுமுண்டாய்
விருத்தியுடன்வாழ்வனென விண்டிட்டேனே. 162

## விஸ்வாமித்திரர்வாக்கு.

விண்டிட்டேனின்னமுந்தான் விவரங்கேளு
விளங்கமேற்சொன்னகோள் மூன்றுதம்மில்
கண்டிட்டவிருவர்களு மேற்புகன்று
காண்பெலசுபகேஷத் திரத்தைப்பெற்று
பண்டாகவிருந்திடிலோ மேற்குறித்த
பரிவானசுபபலனே மிகநடக்கும்
உண்டாகும்ராஜயோ கங்களென்றும்
உறுதியுடனிப்பலனை யுரைத்திடாயே. 163

## வதிஸ்டர் வாக்கு.

உரைத்திடாயெனவுரைத்த முனிவதிஷ்டா
உகந்துரைத்த பொன்னிந்துபுகரோனுதல்
குறித்திடாயல்லதுகே ளிருகோளாகிக்
கும்பமானுடுதேள் மிதுனமிந்த
தரித்திடாராசிகளில் வேறுபாபர்
தான்கூடாதிருக்க விந்ததையலாட்கு
பரித்திடாபர்த்தாவின் பழையசொத்து
பல்லாருநஷ்டமது யடைந்துபோமே. 164

## விஸ்வாமித்திரர் வாக்கு.

போமெனவேயுரைத்திட்ட கௌசிகாகேள்
புகன்றவிடம் சுபமித்துருஸ்தானமாகில்
நாமெனவேசிலநாளுங் கஷ்டமுண்டாம்
நன்மையுண்டாம் சிலகாலம்நங்கையற்கு
தாமெனவேபாபர் சம்பந்தமேனும்
தானலதுபாப க்ஷேத்திரமேயாகில்
ஆமெனவேயழிவோடு தரித்திரியாகி
அதிககஷ்டமோடு கஷ்டமடைந்துவாழ்வள். 165

## வதிஷ்டர் வாக்கு.

வாழ்வளெனவுரைத்திட்ட முனிவதிஷ்டா
வருந்தகர்தேளதனில் ஜெனிக்கில்மாது
மீழ்கவோவிமதிபொன் இராகுகேது
மிக்கதோரிவர்களிட தசைகளானும்

சூழ்கவேசனிபாம்பு சந்திரனுர்தன்
 சுயபுத்திதனிலுமிந்த மாதினுக்கு
தாழ்விலாசெல்வமொடு குடும்பமோங்கும்
 தக்கதோர்ராஜயோக மிதனிற்பேசே 166

வதிஷ்டர் வாக்கு.

பேசுமெனவுரைத்திட்டக் ளௌசிகாகேள்
 பாம்புகுஜன்தசைதனிலே சிலதுபாகம்
பாசமாம்புகர்புந்தி சனிதசையில்
 பாம்புரவிசனியிவர்கள் புத்திகாலம்
தோஷமெனபர்த்துருக்கு யோகபங்கம்
 தோன்றுமேபலவித கஷ்டநஷ்டம்
நாசமாம்புத்திரர்க்குத் தேகாரிஷ்டம்
 நஷ்டமாம்கஷ்டதிசை யென்றுகாணே. 167

விஸ்வாமித்திரர் வாக்கு.

காணுமெனவுரைத்திட்ட முனிவதிஷ்டா
 காலையுடன்கோலதுவே லக்கினமாகி
பூணவேஜெனித்திடினும் ருதுவேயாகில்
 புகர்சனிபெலன் கெடாமேயிருந்தும்
தோணவேதிரிகோண கேந்திரமேறி
 சோக்ஷேத்திர உச்சமித்துருவில்நின்று
க்ஷீணமெனும்பாபிகளைச் சேர்ந்திடாமல்
 சிறந்தசாமதில் நிற்கவயதுகூறே. 168

வதிஷ்டர் வாக்கு.

கூறுமெனவுரைத்திட்ட கௌசிகாகேள்
 கோதையர்க்குவயதுமே யென்பதாகும்
நேறுமிந்துபலத்திடிலோ வயதுநூறும்
 நிலவுபுகர்சனி யிம்மூவர் தம்மில்
தேறுமெனச்சனிநீங்கி யிருவர்தாமும்
 தேள்கடகம்மீன்கன்னி தேடிநிற்க
பாறுமெனச்சுபக்கோட்கள் லக்கினத்தை
 பற்றிடினும்பார்த்திடினும் ஜெனிக்கிற்கேளே. 169

விஸ்வாமித்திரர் வாக்கு.

கேளடாஜாதகியு மழகுள்ளாளாய்
 கீர்த்தியுடன் திருபவதியுமாகி
வேளடாமயில்போன்ற சாயலாகி
 விளங்கிடும் குயில்போன்றமொழியுமாகி

தாளடாதனசனக சம்பத்துண்டாய்
தாணிமிசைநாகரீக முடையாளாகி
ஆளடாவயது அறுபதுதான்மட்டும்
அன்போடுவாழ்வளென வறைகுவாயே. 170

## விஸ்வாமித்திரர் வாக்கு.

அறைகுவாயெனவுரைத்த முனிவதிஷ்டா
அவ்விதமாயிருந்திட்ட கிரகத்தோடு
குறையாகவோர் பாபிவந்துகூடில்
கோதையற்கு வுற்றபலன்கூறக்கேளாய்
நிறையாகவற்பநிதி யுடையாளாகி
நிந்தையாமற்ப பிணியாலும்வாடி
கறையாகபுத்திர சோகமோடுங்
கணவனுக்குமரிட்ட முடையாளென்பாரே. 171

## வதிஷ்டர் வாக்கு.

பாரெனவேயுரைத்திட்ட கௌசிகாகேள்
பரிவாகமேற்கண்ட ஸ்தானந்தன்னில்
சேரெனவேபாபர்களே யிருந்துவாழில்
ஜாதகியுமற்பமா மாயுளோடும்
கூரெனவேகுடும்பமது நஷ்டத்தோடு
கூறுஞ்தரித்திரமு மனுபவித்து
வாறெனவேவையகத்தில் நிந்தையோடு
வாழ்வளெனவிப்பலனை வரைந்திடாயே. 172

## விஸ்வாமித்திரர் வாக்கு.

வரைந்திடாதெனவுரைத்த முனிவதிஷ்டா
வாகாகப்பாபர்களுஞ்சுபருங்கூடி
உரைந்திடவேபாபர்களுக் குறைக்கக்கேளு
உத்தமக்ஷேத்திரமா யுகந்தேநிற்கில்
பொரிந்திடசாதகியும் புகழாய்மிக்க
பொருளோடுதனதான்னிய முடையோளாகி
நிறைந்திடவயதுவைம் பதுவரைக்கும்
நிலமதனில்சுகமாக நீடிவாழ்வாள். 173

## வதிஷ்டர் வாக்கு.

வாழ்வளெனவுரைத்திட்ட கௌசிகாகேள்
வளமாகமேலுரைத்த க்ஷேத்திரந்தானும்
தாழ்வாகவவைபாப க்ஷேத்திரமாகில்
தையலவுள்பாலிய வயதிற்றனும்

ஆழ்கவேதேக வியோகமாவள்
அடுத்துமேபலவிதக் கஷ்டமோடு
மீழ்காதகஷ்டமுடன் துன்பமுற்றும்
மிக்கவேதுயாமுளா ளென்றுசாற்றே. 174

விஸ்வாமித்திரர் வாக்கு.

சாற்றுமெனவுரைத்திட்ட முனிவதிஷ்டா
சந்திரன்புகர்முடவன் மூவரேனும்
போற்றியமூவரி லிருவரேனும்
பொருந்தியமேஷந்தேள் சிம்மங்கண்டு
ஏற்றுமெணவித்தலத்தில் பலன்குறைந்து
இன்னமோர்பாவியிதனைக் கூடிநிற்கில்
ஆற்றுமெனஜாதகிக்கு மற்பவாயுள்
ஆவதுடன்கணவனுக்கும் சோகங்காட்டும். 175

வதிஷ்டர் வாக்கு.

காட்டுமெனவுரைத்திட்ட கௌசிகாகேள்
காணவேமேற்சொன்ன கோட்கள்தானும்
காட்டமாய்ப்பாபருடன் சேர்ந்திடாமல்
நலமாகத்தனித்தவரு மிருப்பாராகில்
பூட்டுமெனயௌவனமாய் ஜாதகிக்கும்
புகழாகவயதுமுப் பத்திரண்டும்
தாட்டியாயுள்ளவளாய் கணவன்தன்னைத்
தையலிழந்தேதவிப்பாள் பரதேசத்தில். 176

விஸ்வாமித்திரர் வாக்கு.

தவிப்பளென வுரைத்திட்ட முனிவதிஷ்டா
தானுரைத்தகோட்களையுந் தயவதாக
குவிப்பாககுருமுத லானநல்லோர்
கூடிடினும்நோக்கிடினும் சிலதுகாலம்
கவிப்பாகதேகசவுக் கியததினோடும்
கணவனுக்கும் சவுக்கியமுமாவதன்றி
பலவகையாம் வருத்தமுற்றுக்ஷேமத்தோடு
பாரிலறுபதுவாண்டு வாழ்வாள்காணே. 177

வதிஷ்டர் வாக்கு.

காணுமெனவுரைத்திட்ட கௌசிகாகேள்
கருத்தாகக்குறித்திட்டக் கோட்களான
பூணுமெனசசிபுகர் சனியோடுமூவர்
புகழ்துலாம்மகரகும்பம் சிம்பம்கண்டு

தோனுமிதிற்சுபரோடு கூடிநிற்கில்
துலங்கியஜாதகியு மறிவுள்ளோளாய்
வேணவேபுராதனம் படைக்கும்செல்வி
வயதுவெழுபத்திரண்டு மிருப்பாள்கூறே. 178

விஸ்வாமித்திரர் வாக்கு.

கூறுமெனவுரைத்திட்ட முனிவதிஷ்டா
கொடியதோர்சாருகேது செவ்வாயான
பாருமெனவிப்பாவி யோடுசேரில்
பாவையர்க்குவயதுபனி ரெண்டுக்குள்ளும்
நேருமெனப்பலவிதச் சுகங்கள்தன்னை
நேராகயனுபவித்துப் பின்னிழப்பாள்
சேருமெனச்சுபபலமாய் சுபரேகூடில்
சுத்தமுடனைம்பதாண்டும் சுகமுண்டாகும். 179

வதிஷ்டர் வாக்கு.

உண்டாகுமெனவுரைத்த கௌசிகாகேள்
உறுதியுடன் மேற்குறித்தராசியான
பண்டுகோலமான்கலசம் சிம்மநண்டு
பகருமிந்தராசிகளில் சுபர்கள்தானும்
திண்டாகச்சுபர்களுமே பலமுமற்றுத்
தீயனெனும்பாபிகளே கூடிவாழில்
மிண்டாகும்ஜாதகியுங் கஷ்டத்தோடு
மேதினியில்கவலையுடன் வாழ்வாள்சொல்லே. 180

விஸ்வாமித்திரர் வாக்கு.

சொல்லெனவுரைத்த வதிஷ்டமாமுனியே
சுன்னுடன் சுக்கிரனிருவர்
வல்லதோராட்சி யுச்சமாமனையில்
வளம்பெறவலுப் பெற்றிருக்க
நல்லதோர்குருமுதலான சுபகோட்கள்
நாடியேகூடிடப் பார்க்க
புல்லெனஜாதகிப் புருடன்தன்னுயுள்
புகலுவாய் புவிதனில்விளங்க 181

வதிஷ்டர் வாக்கு.

விளங்கிடக்கேட்ட விஸ்வாமித்திரனே
விரித்தகோள் புகன்றவாறிருக்க
களங்கமில்லாமல் கன்னியாள்புருடன்
காணவேபாயுள் விருத்தியதாய்த்

தளங்கிடா திருக்க தானவள்மேலாய்
நழைத்திட செல்வமு மோங்கி
உளமதுகளிக்க அடிமையாளுடனே
உலகினில்வாழ்வ ளென்றுரையே. 182

விஸ்வாமித்திரர் வாக்கு.

உரையெனவுரைத்த வதிஷ்டமாமுனியே
ஓங்கியவிவ்விதக் கோனே
குருவங்கிசம்பெறி லரசர்க்குச்சமானமாய்
கோதையாள் பூமிதனையாள்வள்
கரையெனபுந்தி யங்கிசமாகில்கேள்
கணவனும்கல்வி வல்லவனுய்
திரையெனஉலகில் கீர்த்தியுமடைவாள்
தேவியும்தனமதைச் சேர்ப்பாள். 183

வதிஷ்டர் வாக்கு.

சேர்ப்பளென்றுரைத்த கௌசிகாகேளாய்
செல்வியுமா யுளம்பதுவே
கார்ப்பனவென்றுக் கணவனைப்படைப்பாள்
களங்கனு ரங்கிசமேறில்
பார்ப்பெனகணவன் பரஸ்திரீலோலனுமாய்
பலவிதசம்பத்து முடைத்தாய்
தோர்ப்பெனவயது அற்பமாயுலகில்
தோன்றியே வாழ்குவானென்னே. 184

விஸ்வாமித்திரர் வாக்கு.

என்னவேயுரைத்த வதிஷ்டமாமுனியே
எழில்சனி யங்கிசமாகில்
பன்னவேகணவன் அடிமையாளாகியும்
பண்ணுமோர் ஜீவனமோடு
பின்னவேரோகம் பாதையுந்தரித்திரம்
பீடிக்குமாசரால் பகைபும்
இன்னமும்பலவாய் கணவற்குதோஷமு
மிருக்கிட வனுபவிப்பாளே 185

வதிஷ்டர் வாக்கு.

அனுபவிப்பாளென வறைந்தகௌசிகனேகேள்
ஆறலின் அங்கிசமாகில்
தனியெனஜாதகப் பருவபாலியத்தினில்
தன்னுடைய கணவற்குத்தானும்

வினையெனகுலேரோகத்தால் மரணமும்
வாய்த்திடும் பிறதேசாடணமும்
கனியெனப்பலவித வார்த்தையுமாடுவாள்
காரிழையாளெனச் சாற்றே. 186

விஸ்வாமித்திரர் வாக்கு.

சாற்றெனவுரைத்த வதிஷ்டமாமுனியே
சந்திரன் புகர்சனியிவர்கள்
தோற்றமாய்மூன்று வாறெட்டுபனிரண்டில்
தோன்றியே பாபரைக்கூட
வேற்றெனக்கணவன் பணத்தினில்மாணம்
யெய்துவான் சுகமிவட்கில்லே
ஆற்றிடாதுக்க மவளுமேகொண்டு
அயலூரில்போய் பாதவிப்பாள். 187

வதிஷ்டர் வாக்கு.

பாதவிப்பாளெனப் பகர்ந்தகௌசிகனே
பாரதேள்தனுதுலே தனிலும்
உரமெனக்கன்னிதேள் மிதுனமேடத்திலும்
ஊருசேய்பாம்புசுன் னிருக்கில்
விரதமாய்ஜாதகி பாவியமதனிலும்
விதவையுமாகியே தவிப்பாள்
தாமெனவிரண்டுகோ ளுறில்கிழவி
தன்னிலே விதவையாகுவளே 188

விஸ்வாமித்திரர் வாக்கு.

ஆகுவளென்ற வதிஷ்டமாமுனியே
ஆனதோர் லக்கினத்தோனும்
பாகமாய் வெற்றிமதியொடுங்கொடிய
பரிதியுஞ் சனிகுஜனிவர்கள்
ஏகமாய்க்கூடியாறெட்டு வியத்தில்
இருந்திட ஜாதகிபிணியால்
தாகமாய்புத்திர சோகமுமடைந்து
தான்சுகமின்றியே யிருப்பாள். 189

வதிஷ்டர் வாக்கு.

இருப்பளென்றுரைத்தக் கௌசிகாகேளாய்
எழில்குருமுதலி யச்சுபர்கள்
சிறப்புடன்பார்க்கக் கூடியுமிருக்கில்
சிறிதுநாள்வருந்தி பின்சுகிப்பாள்

வெறுப்பெனவேண சவுக்கியமோடும்
வெகுதனம்புவிதனில் படைத்தும்
குறிப்புடன்கீர்த்தி யோங்கியேமேலாய்
குணவதியாகவே வாழ்வள் 190

விஸ்வாமித்திரர் வாக்கு.

வாழ்வளென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
வளமுடனெட்டி ரெண்டோறும்
மீழ்கவேசுத்த மல்லதுசுபர்கள்
மேவியேயிருந்திடப் பார்க்க
சூழ்கவேசாதகியநித்தியம் வரையினும்
சுமங்கலியாகவே யிருந்து
தாழ்விலாயோகக் கணவனேமணந்தும்
தாணியில்வாழ்வ ளென்றறிவாய். 191

வதிஷ்டர் வாக்கு.

அறிகுவாயென்ற கௌசிகாகேளாய்
அன்னவள்கணவன் தன்னுடைய
நிறைகுணபூர்வதன மதுவன்றியும்
நீடியநூதன தனத்தை
பிரியமாய்த்தேடி பூமிவாகனமும்
புகழ்மனைகன்று காலிகளும்
புரியவேபூவைவந்த நாள்முதலாய்
பெருகுமென்றறிந்துநீ யுரையே. 192

விஸ்வாமித்திரர் வாக்கு.

உரையெனவுரைத்த வதிஷ்டமாமுனியே
உகந்துமே புகரங்கிசமாகில்
நிறையெனஜாதகி லீலாவினோதியாய்
நிகழ்காமவதிருபவதியாய்
அறையெனவெள்ளை வஸ்திராபாணமும்
அனுகுவள்பிரியமாய்தானும்
கறையெனக்கல்விபாட்டு சங்கீதமுங்
களிப்புடன்கேட்டுமே மகிழ்வாள். 193

வதிஷ்டர் வாக்கு.

மகிழுவாளென்ற கௌசிகாகேளாய்
மருவிடபுதனங் கிசமாகில்
புகழுடன்கல்வி திறமைவாக்குடையாள்
புத்தியில்சாதுர்யவதியாய்.

திகழுடன் தாதியர் போலுமேபுவியில்
தீங்கதுவணிகிடாநாளும்
நிகழெனநிதியும் செல்வமும்வாழ்வும்
நீடிடுமெனவே கூறாய். 194

விஸ்வாமித்திரர் வாக்கு.

கூறுவாயென்ற வதிஷ்டயாமுனியே
குருவுடையவங்கிசமாகில்
நேறுமேராஜயோகம் சற்குணியாய்
நேர்மையாய்த் தனங்களைப்படைத்து
தேறுவாள்தந்திரவித்தை புத்தியுமாய்த்
தேன்மொழியாளுமே யிருந்து
மீறுமேபுத்திர லாபமொடுகுடும்பமும்
மிக்கவேவிருத்தியாமென்னே. 195

வதிஷ்டர் வாக்கு.

என்னவேசேயின் அங்கிசம்பெற்றிடில்
ஏந்திழை தைரியமுடையாள்
பன்னவேசண்டையுத்த மாமதனில்
பாவையாள் முதன்மையாய்நிற்பாள்
மன்னியகணவன் தன்னையுமிழந்து
மாதவள்தனித்து துர்க்குணியாய்
அன்னவள்வெட்கமான மில்லாளாய்
அவனியிலிருப்ப ளென்றறையே. 196

விஸ்வாமித்திரர் வாக்கு.

அறைகுவாயென்ற வதிஷ்டமாமுனியே
அடர்சனியங்கிச மேறில்
குறையதாயவளும்வது கையில்லாளாய்
கோதையாள் பின்காலமதனில்
சரியிலாபர்த்தா தன்னையுமடைந்து
சாற்றுரு கஷ்டமேபட்டு
பிறியவேயில்லா வாழ்க்கையும்விட்டு
பேசொணுதரித்திரி யாவாள். 197

வதிஷ்டர் வாக்கு.

அவளென்றுரைத்தக் கௌசிகாகேளாய்
அரும்புதன் புகர்கூடினும்
தாவெனகேந்திர திரிகோணமதுவும்
தக்கதோர் சுபக்ஷேத்திரமாகி

ஏவெனகுருசசி வீக்ஷண்ணியம்பெற்றிடில்
ஏகமாங்கிரகவாகனம் பூமிபலவும்
காவெனக்கன்னியர்க்கே வந்துசேர்ந்திடும்
களிக்கவே யென்றுரைசொல்லே. 198

விஸ்வாமித்திரர் வாக்கு.

சொல்லெனவுரைத்த வதிஷ்டமாமுனியே
சோர்விலா மேற்கோளுடனே
வல்லெனசனியல்லது பாம்புகள்
வாகுடன்சேரி லம்மாதும்
புல்லெனப்புருடன் தன்னைபோல்தானும்
பூவையாளெவரையு மாள்வாள்
அல்லெனமான மில்லா தவளுமாய்
அரசரைக் கூடுவள்பாரே. 199

வதிஷ்டர் வாக்கு.

பாரெனவுரைத்த கௌசிகாகேளாய்
பாபிகளன்றியே கூடில்
நேரெனவிசேஷக் கல்விவிருத்தியுமாய்
நேரிழை யனேகருக்குமேலாய்
சீரெனப்பிரபுபோ லிருந்துமேயுலகில்
சிறப்புடன் புகழ்ந்திடாதானும்
காரெனக்கணவன் யன்றியேமாது
களிப்புடன்யோகமே யடைவள். 200

விஸ்வாமித்திரர் வாக்கு.

அடைவளென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
அறைந்திட்ட கிரகமாகியதோர்
வடிவுளபுந்திபுக ரிவர்தாமும்
வாகுடன்மூன்றுறெட்டினும்
நடைபணிரண்டுடன் ஈண்டுபதினொன்றினில்
நண்ணியே பாபரும்கூடிடில்
தடையிலாஜாதிக்கு சொந்தமாம்பொருள்களை
தையலாள் பிறருக்குமேயீவாள் 201

வதிஷ்டர் வாக்கு.

ஈவளென்றுரைத்த கௌசிகாகேளாய்
இயம்புமேற்சொன்ன ஸ்தானத்தில்
தாவியேசுபர்கள் கூடியேவாழில்
தானவள் தருமமே செய்வாள்

மேவெனவின்னவள் சொத்ததுதானும்
மிக்கதோர் சுபங்கட்குச்சேரும்
ஆவெனவிவட்குக் கீர்த்தியும்பெருகும்
அரிவையர்க்கிப்பலன் சாற்றே. 202

## விஸ்வாமித்திரர் வாக்கு.

சாற்றெனவுரைத்த வசிஷ்டமாமுனியே
சதுருடனகயககோட்கடமக்கு
ஊற்றென உபயபாரிசமதனில்
ஓதிடப்பாபர்க ளிருக்கில்
கேர்த்தியாய்தனக்கு பலவாறுகிடைத்த
நிதியெலாம் வழக்கினலழியும்
தோற்றமேதானும் தோகையாள்வாடி
தொல்லையும் படுவளென்றுரையே. 203

## வசிஷ்டர் வாக்கு.

உரையெனவுரைத்த கௌசிகாகேளாய்
ஒருமையாய் குருபுகர்தானும்
நிறையெனத்திரிகோண சுபபலனேடுமே
நீடிய சசிகேந்திரமாகி
யரையெனக்கதிருச்ச மாகூஷிநட்பாகி
அரியயம்மனை பலன்பெற்று
திரையெனவிருக்க ஜாதகிதனக்கும்
தீண்டியபலனதைச் சொல்வாய். 204

## விஸ்வாமித்திரர் வாக்கு.

சொல்லெனவுரைத்த வசிஷ்டமாமுனியே
சோதிநால்பத்து பதினொன்பான்
வல்லதோர்பாம்பு சனிபாபர்களன்றி
வழுத்துமேழாமிடமலது
நல்லதோர்சுபர்கள் நாடியேயிருக்கில்
நங்கையாள் ஜாதகிதனக்கும்
புல்லவேயாவரும் புகழ்ந்திடத்தானும்
புவிமன்னர்போ லிவள்வாழ்வள். 205

## வசிஷ்டர் வாக்கு.

வாழ்வளென்றுரைத்த கௌசிகாகேளாய்
வளமிலா பாபர்கள்கூடில்
ஆழ்கவேபூர்வீக செல்வமுமழியும்
அருஞ்சுபர் பாபர்களாகிற்

சூழ்வதாய்ப்பாபர் வீட்டினிலுறையில்
தையலாள் தரித்திரப்படுவாள்
சூழ்கவே துக்கத் துன்பமும் படுவாள்
தோகையர்பலனிது மொழிவாய் 206

விஸ்வாமித்திரர் வாக்கு.

மொழியுமென் றுரைத்த வசிஷ்டமாமுனியே
மோதிடுங் குருசனியிருவர்
வழியுடன்சொந்த சுபக்ஷேத்திரமாகில்
வஞ்சியாள்புத்திர விருத்தியுமாய்
செழிப்பெனயோக நிதிவிருத்தியாகு
சேயரால்கீர்த்தியு மடைந்து
பழியதுவிழாமல் பாவையாள் தானு
பாரினில் வாழ்குவாள்மேலாய் 207

வசிஷ்டர் வாக்கு.

மேலெனவுரைத்தக் கௌசிகாகேளாய்
மேற்சொன்ன குருசனியிவர்கள்
சாலெனவிரோத க்ஷேத்திரத்திருந்து
சனிபாம்பு பாபரைக்கூடினும்
மூலமாயாறைந்து ரண்டிந்தவிடத்தில்
மூடவனும்பாம்பு குஜனுறினும்
கோலமாயவ்விடத் தகிபர்கள்தானும்
குறுகியே நீசத்திலிருக்க 208

இதுவுமது.

இருக்கவேயல்லதுசனி புதனிவர்கள்
எழிலாட்சி தன்னிலேயிருக்க
வருக்கமாம்புத்திர லாபமேயில்லை
வாகுடனக் கோளினுடனே
பெருக்கமாம்சனியும் அல்லதுபுந்தி
பெட்புடன்கூடியே யிருக்கில்
செருக்கதாய் சுவிகாரமுதலியயபிமான
சேயுண்டா மின்னமுங்கேளே. 209

இதுவுமது.

கேழ்க்கவே தௌஷித்திரபுத்திரர்தம்மால்
கிளிமொழிகருமத்தை யடைவள்
ஆழ்கவேயிவ்வித மிருந்தகிரகத்துடன்
ஆம்பத்தாமிட மில்தானும்

தாழ்கவேபாபிகளாவது வவ்விடத்
  ததிபன்பலன் குறைந்துமேயிருக்கில்
மீழ்கவேகருமபுத்திர ரின்றியே
  மெல்லியாள் வருந்துவாள்காணே. 210

விஸ்வாமித்திரர் வாக்கு.

காணுமென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
  கருதியப்படி நின்றகோட்கள்
வேணவேகுருமுதல் சுபர்கள்வீக்ஷணியம்
  மல்லது சம்பந்தமேயாகில்
பூணவேயற்பப் புத்திரவிருத்தியுடன்
  பூவையாள் யோகமதாக
தோணவேமனது திருப்தியதாகவும்
  தோகையாள் வாழ்குவள்சுகமாய். 211

வதிஷ்டர் வாக்கு.

சுகமெனவுரைத்த கௌசிகாகேளாய்
  சுகருது வலதுமேபிறக்கில்
இகமெனவிரண்டைந்தே தொன்பானிந்த
  இடங்களில் குருசந்திரனலது
புகர்சுபபலத்துடன் பொருந்தியேயிருக்கில்
  புத்திரியதிகமே விருத்தி
அகமெனபுத்திரர்பின் வயதுற்றிடும்
  அரிவையாள் தனக்கெனவோதே. 212

விஸ்வாமித்திரர் வாக்கு.

ஓதவேயவ்விதப் பெண்பிரஜைதானுமே
  உற்றிடுங் காலமுதற்கொண்டே
போதவேகுடும்பம் தழைத்திடும்மேலாய்
  பொங்கியே யோகமும்லாபம்
சோதியாம்கிரகம் வாகனம்க்ஷேத்திரம்
  சூழ்புவிமன்னர் சன்மானம்
ஏதவேயிவ்வித யுத்தமப்பலன்கள்
  எழிலுடன்மாதுக்கு நடக்கும். 213

வதிஷ்டர் வாக்கு.

நடக்குமென்றுரைத்த கௌசிகாகேளாய்
  நவின்றதோ ரவ்விடத்ததிபர்
இடக்கெனசனிபுதன் க்ஷேத்திரமேநிற்கில்
  எதியேபாம்புபகை யிவர்கள்சேர்ந்து

சடக்கெனவிரண்டைந்தே தொன்பானிற்றுன்
சனிபாம்புபுதனிரண்டு பாபிசேர்ந்தால்
முடக்கெனமுன்னும் பிறந்தசேயிறக்கும்
மொழிகுவாய்பின்னல் விருத்தியென்றே 214

விஸ்வாமித்திரர் வாக்கு.

விருத்தியாமென்ற வதிஷ்டமாமுனியே
விளங்கிய லக்கினமதற்கு
பொருத்தமாம் பத்தாமிடத்தினிலாவது
புகழுமேழிரண் டொன்பாள்தனிலும்
வருத்தமில்லாமல் சுபர்களேவிருக்க
வல்லதுபாபர் பார்த்திடினும்
பொருத்தமாம் புத்திரலாபமில்லாமல்
பூவையாள் கஷ்டமேயடைவாள். 215

வதிஷ்டர் வாக்கு.

அடைவளென்றுரைத்தக் கௌசிகாகேளாய்
அடைவுடனுரைத்த க்ஷேத்திரத்தில்
தடையிலாபுந்தி சசிமித்துருசுபரும்
தான்கூடி யிருந்திடமாது
கடையதாய் காலதாமதத்தின்மேல்
கனபுத்திரலாபமே யடைந்து
வடிவதாயந்த புத்திரர்தம்மால்
வஞ்சியர்சௌக்கியம் பெறுவாள். 216

விஸ்வாமித்திரர் வாக்கு.

பெறுவளென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
பேசியவவ்வித விராசி
அறியவேசுத்தமாகி யவ்வதிபர்கள்
அருங்கோணகேந்திர சுபக்ஷேத்திரமேயிருந்து
பிரியமாய்சுபருடச் சம்பந்தமாகியே
பெற்றிடினு மவருடையதிருஷ்டி
நிறையெனவிசேஷ புத்திராால்யோகம்
நிலைத்திடும் கங்கையர் தனக்கே. 217

வதிஷ்டர் வாக்கு.

தனக்கெனவுரைத்த கௌசிகாகேளாய்
தையலாள் தனக்குமேகல்ல
கனக்கவே காணவாகனம்பூமிபொன்
தாலியுங்கன் றுடன் செல்வம்

சினக்கவேயோகம் சௌக்கியமோடு
சிறந்ததோர் மாடமாளிகையும்
இணக்கமாய்க்கட்டி யேந்திழையாளும்
எழிலுடன்வாள்வ ளென்றியம்பே. 218

விஸ்வாமித்திரர் வாக்கு.

இயம்பிடகுரு சனியுடனிலக்கினத்திற்கு
இரண்டே ழொன்பதாமிடத்தும்
வயம்பெறவலது வத்தானபதிகள்
வாழுமோருறிய கிரகத்தின்
பயன்பெறபலாபல வெண்களையெடுத்துமே
பரிவாக யவரவர்க்குற்ற
நயம்பெறும்பூரா யெண்கள்பேருக்கு
நலமுடன் கொடுத்துமேவந்த. 219

இதுவுமது.

வந்ததோரீவில் சுபபுருஷகிரகவீவு
வளமாகக்கண்ட தெத்தனையோ
தொந்தமாமத்தனை புருஷசந்ததிதீர்க்கம்
துலங்கும்பெண் சுபக்கோட்களீவு
விந்தையாமெத்தனை யத்தனைபெண்தீர்க்கம்
விளங்கிடு மாதவள்தனக்கு
அந்தமாயிதனை யாராய்ந்துகண்டு
ஆண்பெணித்தனை யெனவறிவாய். 220

வதிஷ்டர் வாக்கு.

அறிகுவாயென்றக் கௌசிகாகேளாய்
அன்புடன்மேற்கண்ட சுபக்கோள்
பெருகியவெண்களையவ் விராசிபரலெண்ணினுல்
பெருக்கியே யொன்பதில்கழிக்கச்
சரியென சேஷமும்வந்ததோரீவைச்
செப்புமோரேழினிற் பெருக்கி
திரையெனவொன்பதில் கழித்தசேஷமதான
தசாபுத்தி தன்னிலேபாராய். 221

இதுவுமது.

பார்க்கவேபுத்திரலாப விருத்தியினோடு
பாக்கியயோகமும் வாய்த்து
சேர்க்கவேகிரமவாகன சம்பத்தும்
சிறந்திடும் ராஜயோகங்கள்

வர்க்கவேயிவ்வித ஒவ்வொருதசையூணில்
எழில்பாவ மதுகளைக்கண்டு
தீர்க்கமாய்நிதானித்து தெளிவாகப்பலன்களைத்
தெரிந்துநீர்சாற்றவே வேண்டும். 222

விஸ்வாமித்திரர் வாக்கு.

வேண்டுமென்றுரைத்த வசிஷ்டமாமுனியே
விளங்கிய லக்கினந்தானும்
பூண்டிடபுந்தியங்கிசம் பெற்றிடில்
பூவையாள்கல்வியில் வல்லாள்
வேண்டியவஸ்திரா பரணவலங்காரமும்
விளங்கிடும் சுகமோடுசெல்வம்
காண்டிடக் கிரகவாகனம்பூமி
காணவேவாழ்குவள் மேலாய். 223

இதுவுமது.

மேலெனஜாதகி சமவுயரமாக
மிக்கதோர்நீண்ட தாய்க்கழுத்தும்
கோலமாம்வடிவும் மாநிறமுள்ளாள்
குறையிலா வாழ்கினுங்கேளாய்
காலமேல்புத்திர தோஷமேயடைந்தும்
தனமது விருத்தியுண்டாகி
சீலமாம்ஞான வதியாகிக்கடைக்கு
செல்வியும் புருடனையிழப்பாள். 224

வதிஷ்டர் வாக்கு.

இழப்பளென்றுரைத்த கௌசிகாகேளாய்
எழில்புகர் அங்கிசமாகில்
செழிப்புறும்பூமி செல்வமுமோங்கும்
சேயிழையதிரூப முடையாள்
வழிப்பெருமகனே வஸ்திராபரணமும்
வாகுடன்தரித்திடும் நல்லாள்
தழைத்திடப் புத்திரவிருத்தியுமுண்டாய்
தையலாள் காமியாயிருப்பாள். 225

விஸ்வாமித்திரர் வாக்கு.

இருப்பளென்றுரைத்த வசிஷ்டமாமுனியே
எழில்குரு அங்கிசமாகில்
சிறப்புடன்ஜாதகி கணவனுர்தனக்கு
சித்தியாம் உத்தியோகவிருத்தி

குறிப்புளநல்லக் குணவதியாகியே
குறைவிலாபுத்திரரைப்பெறுவாள்
பொருப்புடனெவரும் புகழ்ந்திடமேலாய்
புண்ணியவதியென வாழ்வாள். 226

## வதிஷ்டர் வாக்கு.

வாழ்வளென்றுரைத்த கௌசிகாகேளாய்
வருஞ்சனி யங்கிசமாகில்
தாழ்வெனவந்த ஜாதகிதானும்
தயங்கிடும் மலடியேயாகும்
மீழ்வெனவதிகக் காமியாய்த்தானும்
மேதினிதன்னிலே கேளாய்
சூழ்கவேபலரைத் தோகையாள்சேர்ந்து
சுகங்களை யனுபவித்திடுவாள். 227

## விஸ்வாமித்திரர் வாக்கு.

வாளெனவுரைத்த வதிஷ்டமாமுனியே
வருங்குஜ னங்கிசமாகில்
தாளெனஜாதகி பாலியவிதவையாய்த்
தானுகிருடுப்ப க்ஷயமடைந்து
கோளெனப்பலர்க்குமே விரோதியாளாகியே
குலவும்சிமந்த புத்திரியாய்
ஆளெனவாழ்ந்த வூரையுமிழந்தும்
அரிவையாள் வாழ்வளென்றறையே. 228

## வதிஷ்டர் வாக்கு.

அறையுமென்றுரைத்த கௌசிகாகேளாய்
அருங்குரு சனிபுகர்சந்திரன்
நிறைந்திடுமிவர்கள் திசைதனிற்றானும்
நீள்புகர்பாம்பு சசிபுக்தி
பிறிந்திடாதிவர்கள் புத்தியில்தானும்
புகழுளவிவாக சோபனமும்
குறைந்திடாச்சுகமும் கணவற்குத்தாமும்
கூடிடும்குடும்ப விருத்தியுமாம். 229

## இதுவுமது.

விருத்தியாம்புத்திர லாபமோடிவற்கு
விளங்கிடும் ராஜயோகங்கள்
கருத்துளகிரக வாகனம்பூமியுங்
கன்றுடன்காலி யபிவிருத்தி

திருத்தமாம்வஸ்திரா பரணங்கள்சேர்க்கையும்
திகழுள தன லாபயோகமும்
பொருத்தமாய்ப்புத்தியிலிவ் விதப்பலன்களும்
புகலுவாய் தசையிலுமென்றே. 230

விஸ்வாமித்திரர் வாக்கு.

என்றெனவுரைத்த வதிஷ்டமாமுனியே
எழில்குஜன் கதிர்பாம்புதசையில்
நன்றெனச்சனிபாம்பு சேய்கதிரிவர்கள்
நண்ணிய புத்திகாலத்தில்
மன்றெனஜாதகி தனக்குமேகேளாய்
மாகொடியரோகமும் மாணமுமணுகும்
கன்றெனச்சுதரோடு கணவற்குத்தானும்
கஷ்டநஷ்டமோடு துன்பமேகாட்டும். 231

இதுவுமது.

காட்டியேபலபொருள் சேதமேயாகி
காணவே குடும்பமதிற்றுனும்
வாட்டியேசத்துரு பயமோடுரோக
மறையொணு வுபாதியாற்றுனும்
கூட்டியே துன்பம் கெர்ப்பவாதனையால்
குறுகிடவினு கிடுங்கண்டம்
நாட்டியேபலவகைத் துக்கமுந்தானே
நண்ணிடும்தசை புத்தியதனில். 232

வதிஸ்டர் வாக்கு.

நண்ணிடுமென்றக் கௌசிகாகேளாய்
நாடிடும்புதனவர் திசையில்
வண்ணமாம்சசிகுரு சனியிவர்திசையில்
வாய்த்திடும் வித்தையுஞானம்
திண்ணமிலாமல் திகழ்பலனேங்கும்
தேடியேபொருள் பூமிவரும்
கண்ணெனவிவ்வித புத்தமப்பலன்களைக்
களிப்புடன்கண்டுநீ வகுப்பாய். 233

விஸ்வாமித்திரர்வாக்கு.

வகுத்திடுமென்ற வதிஷ்டமாமுனியே
வண்புகர் சனியிவர்தாமும்
பகுத்திடும்நட் பாட்சியுச்சத்திலும்
[illegible] கோணமுமாய்

தொகுத்திடச்சாமா யிருவருமிருக்க
தோன்றிய ஜாதகிதனக்கு
மிகுத்திடும்வய திவ்வளவென்றும்
மேன்மையாய்க் கண்டுரைசெய்வாய். 234

## வதிஷ்டர் வாக்கு.

உரைசெயுமென்றக் கௌசிகாகேளாய்
உற்றிடும் சாமாகில்வயது
பெற்றிடும்வயது எழுபத்திரண்டு
பேசியத்திரம் ஸ்திரமாகில்
குறையெனவயதுப் பதின்மூன்றுக்குள்ளாம்
கூறவேயுபய யுபயமாகில்
நிறையெனவைபத்திம் நாலுக்குளென்றும்
நீள்சாதிரமாகிலீராறு. 235

## இதுவுமது.

சாமுடனுபயமே யாகில்நாற்பத்தாறு
சாற்றியஸ்திரமுபயமாகில்
தருமெனநாற்பத் திரண்டுக்குளென்றும்
தக்கதோர்கோணசுப கேந்திரம்நீங்கி
பெருமெனவேறிடங் களிலிருக்கில்
பேசிடசாம் சாமாகில்
வருமெனவயது பதினொன்குக்குளேயென்றும்
வாகுடனறிந்து வயதின்னமுங்கேளே. 236

## இதுவுமது.

கேட்டிடசாமுடன் உபயமேயாகில்
கழறுவாய்வயது மெட்டேயாகும்
மட்டிலாசாமுடன் ஸ்திரமுமேயாகில்
மறைகுவாய் வயதுநாலொன்றும்
இட்டமாம்ஸ்திரமுடன் ஸ்திரமுமேயாகில்
இயம்புவாய்வயது மிருபத்தேழு
வட்டமாம்ஸ்திரமுடன் உபயமேயாகில்
வழுத்துவாய்வயது முப்பானொன்பானென்றே. 237

## இதுவுமது.

என்னவேயுபயமொடு யுபயமேயாகில்
எழிலனவயது வைம்பதுவாம்
மின்னவேயுபயமொடு சாமதுவாகில்
மொழிகுவாயறுபத்தி னொன்பதெனவயது

பன்னவேயுபயமொடு ஸ்திரமுமேயாகில்
பகருவாயென்பத்தி நாலெனவயது
மன்னவேயிவ்வாறு மகிழுடன்கண்டுமே
மருவியவயதுமே கூறே. 238

விஸ்வாமித்திரர் வாக்கு.

கூறெனவுரைத்த வதிஷ்டமாமுனியே
குருபுகர் பலத்துடன் தானும்
நேரெனகடகமீன் தேளினிலிருந்திட
நீடியசசி புகாலது
ஏரெனவியாழ னேழுக்கேழாகவும்
எழிலுட னமர்ந்துமேயிருக்கில்
சீரெனஜாதகி தனக்குமேவயதுதான்
செப்புவாய் பூரணாயுளுவே. 239

வதிஷ்டர் வாக்கு.

பூரணமென்ற கௌசிகாகேளாய்
புகழ்குரு குஜனுமேசேர்ந்து
காரணமாகலக்கினந் தன்னிலும்
களிப்புட னிருந்திடவலது
நேரெனலக்கினத் திரிகோணத்தேனும்
நீடியசசிகேந் திரத்திருக்கில்
வாரணிமாதுவாயுள் விருத்தியதாய்
வையகமீதினி லிருப்பாள். 240

விஸ்வாமித்திரர் வாக்கு.

இருப்பளென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
எழில்சசிசனிகுரு விவரில்
சிறப்புடனிருவ ராறெட்டுபனிரண்டில்
சீரியபகை நீசம்பெற்று
வெறுப்பெனவிரோதியாம் பாபரைக்கூடியே
விளங்கிடும் லக்கினமதற்கு
குறிப்புடன்ரண்டு பனிரண்டில்தானும் 241
கொடுஞ்சனிபாம்பு சேய்கேளாய்.

இதுவுமது.

கேட்டிடவவ்விதப் பாபிகள்தாமுமே
கேவலமாய்க் கூடியிருக்கில்
நாட்டமாம்ஜாதகி தனக்குமேகேளாய்
...மாயுளு மற்பமாய்

வாட்டிடதரித்திர யோகாதிபீடையை
வஞ்சியாளடைந்துமேதானும்
பூட்டகமாகப் புவிமீதுதானும்
பூவையாள் வாழ்வளென்றோதே. 242

வதிஷ்டர் வாக்கு.

ஓதுமென்றுரைத்த கௌசிகாகேளாய்
உறுஞ்சசி புகர்கதிபுந்தி
போதவேயிவர்கள் கேந்திரகோணத்திலும்
புகழுள வாகூசியில்நிற்க
ஜாதகிதனக்கு வாயுள்விருத்தியுமாய்
சகலபாக்கியங்களும் பெற்று
நீதியாய்த்தானும் நிதிதனைமடைத்தும்
நிலையுடன்மன்னர்போல் வாழ்வாள். 243

விஸ்வாமித்திரர் வாக்கு.

வாழ்வளென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
வளம்பெரும் கடகலக்கினத்தும்
தாழ்விலாபுதனுர் அங்கிசம்பெற்றிடில்
தையலாள் ஜாதகிதானும்
மீழ்கவேகணக்கினும் மிக்கதனசேர்க்கையும்
மிக்கபலமுயற்சியுஞ் செய்வாள்
சூழ்கவேபர்த்தாவைச் சேர்ந்தநாள்முதல்
சொல்லுவேன் பதிபலன்கேளே. 244

இதுவுமது.

கேளெனவவ்விதப் புருஷனுர்தனக்குமே
கீர்த்தியுடன் வியாபாரமோங்கி
தாளெனபலதன பெரும்பொருள்செல்வமும்
தழைத்திடுங் கிருகவாகனமும்
வேளெனக்குடும்ப விருத்தியும்சுபமும்
விளங்கிடும்மேலெனயோகம்
ஆளெனவாழ்ந்துயாவரும்புகழ்ந்திட
அடைந்திடச்சுக பதவியுமுண்டாம். 245

வதிஷ்டர் வாக்கு.

உண்டெனவுரைத்த கௌசிகாகேளாய்
உற்றதோர் புகரங்கிசமாகில்
கண்டிடமாது ரூபவதியாகப்பலர்
காணவிச்சிக்கவே பொருந்தி

பண்டெனவதிகக் காமியாயிருந்தும்
பலவிதரோக முள்ளவளாய்
கொண்டெனசெல்வம் யோகமும்வாய்த்து
கோதையாள் வாழ்ந்துமேவருவாள். 246

விஸ்வாமித்திரர் வாக்கு.

வருவளென் றுரைத்தவதிஷ்டமாமுனியே
வடர்சனி யங்கிசமாகில்
மருவெளஜாதகி மறுபுருடன்றனை
மாதவள்மகிழ்ந்துமே மணப்பள்
பிருவெனப்புவியில் விரோதியாளாகி
பேசவேகடூரி யாயிருந்து
தருவெனதரித்திரமுடையவளாகியும்
தையலாளிருந் துழள்வாளே. 247

வதிஷ்டர் வாக்கு.

வாளெனவுரைத்த கௌசிகாகேளாய்
வக்கிர னங்கிசமாகில்
ஆளெனஜாதகி யற்பபிணியாளுமாய்
ஆளற்குவிரோதியுமாகி
கோளெனக்கலகம் கோதையாள்மூட்டி
கூஒருணு விவாகத்தைச்செய்து
தாளெனப்பொருந்தி தாணியின்மீதில்
தையலும் வாழ்குவாள்பாரே. 248

விஸ்வாமித்திரர் வாக்கு.

பாரெனவுரைத்த வதிஷ்டமாமுனியே
பண்புளகுரு வங்கிசமாகில்
நேரெனஜாதகிகணவனுர்தனக்குமுன்
நெருங்கியகஷ்டநஷ்டமதாய்
கூரெனபின்னல் யோகமும்பொருந்தி
குறையிலா வஸ்திரபூஷணமும்
சீரெனச்செல்வம்பெருகிசுமங்கலியாய்
செழிப்புடன் வாழ்குவாள்காண. 249

வதிஷ்டர் வாக்கு.

காணுமென் றுரைத்த கௌசிகாகேளாய்
கருதியசனிகுரு விவர்கள்
பூணமேயாட்சியுச்ச கேந்திரத்து
[illegible] பலத்து

நாணவேசெப்பாம்பு முதலினோர்சோது
நண்ணும்சுப பலத்துடன்றுனும்
தாணவேமகரமொடு மீனமதிற்றுனும்
தோன்றியேபாபிகளன்றியேயிருக்கில். 250

இதுவுமது.

இருந்திடஜாதகிதனக்குமேதானும்
இளமைமேல் வயதுளமட்டும்
பொருந்திடசுமங்கலிய வதியாயிருந்தும்
புகழுடன்பலவகை தனங்களுந்தேடி
சிறந்திடசகலவித ஐஸ்வர்யவிருத்தியாய்
செல்வமும்மேலான சுகமதுபெற்றும்
நிறைந்திடயாவரும் புகழ்ந்திடக்கீர்த்தியாய்
நேரிழையிருப்ப ளென்றுரையே. 251

விஸ்வாமித்திரர் வாக்கு.

உரையுமென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
ஓதியகோள வருடனும்
விரோதமாம்சுபர்களல்லதுபாபிகள்
விளங்கிடக் கூடியேயிருக்கில்
குறையெனமத்திப வயதுசுமங்கலியுமாய்
கோதையாள் தனங்கொஞ்சந்தேடி
அறையெனசிலகாலம் தரித்திரமடைந்துபின்
அரிவையாள் பின்சுகப்படுவாள். 252

வதிஷ்டர் வாக்கு.

சுகமெனவுரைத்தக் கௌசிகாகேளாய்
சொல்லிய குருசனியிவர்கள்
அகமெனவாறெட்டு பனிரண்டினும்
அரும்பகை நீசத்துமிருந்து
உகமெனவேழெட் டொன்பதாமிடங்களில்
உறும்பாம்பு குஜன்கதிரண்டு
கதமெனபாபிகளிருக்கில் பாலியத்தினம்
கணவனை யிழப்பளென்றறையே. 253

விஸ்வாமித்திரர் வாக்கு.

அறையவேசொன்ன வதிஷ்டமாமுனியே
அவ்விதமிருந்திடும்பாபர்
குறையிலாகுருமுத லானதோர்சுபர்களின்
கூடிடும்வீக்ஷணியம் பெற்றிடில்

நிலையவேயாண்டு முப்பதுவரைக்கும்
நீடிடகணவற்கு வாயுள்
நிறையெனவிருத்தி சுகந்தையும்பெற்று
நீடியேவாழ்குவா ளோங்க 254

வதிஷ்டர் வாக்கு.

ஓங்குமென்றுரைத்த கௌசிகாகேளாய்
உற்றதோர் சம்மகும்பத்தில்
தாங்கியேகேய்பாம்பு கூடியேயிருக்கில்
தையலாள் பாவியந்தனிலே
ஏங்கியேதானு மிருந்துமேமாது
ஏந்திழை வைதவ்வியமாவள்
பாங்குளப்பாவை பரதவித்திடுவாள்
பாரினிலென்றுரை சாற்றே. 255

விஸ்வாமித்திரர் வாக்கு.

சாற்றெனவுரைத்த வதிஷ்டமாமுனியே
சனிகுருவிருவ ரிவர்தாமும்
தோற்றமாய்லக்கின மதற்குமேகேளாய்
துலங்கியதனவிய லாபம்
ஏற்றவேயிருந்து சுபபலன்பெறினும்
அல்லது அசுபமேபெறினும்
கூற்றெனவந்த ஜாதகிதானும்
கூற்றுறுதுக்கமு மடைவாள். 256

வதிஷ்டர் வாக்கு.

அடைவளென்றுரைத்த கௌசிகாகேளாய்
யானலக்கினத்தி லாவதுவே
வடிவுளவேழாமிடத்திலாவதுவே
வாகுடன்மேற்சொன்ன சனிகுருவிருக்கில்
தடையிலாஜாதகி கணவனுர்தனக்குமே
தக்கதோரரசர் மூலமதாய்
படியினில்ஜீவன விருத்தியும்தனதான்னிய
பலிதமுண்டாகியே யின்னம். 257

விஸ்வாமித்திரர் வாக்கு.

இன்னமுங்கேளாய் விசேஷமதாகவும்
எழில்செல்வமுடன் வரும்யோகம்
மின்னெனமாது மேன்மையாய்வாழ்ந்து
மெல்லியாள்வருவது மலாமல்

கன்னியாள்தன்னுட கணவனுர்தனக்குமே
காணவேயாயுள் விருத்தியதாய்
மன்னியேயிருவர் சுகமுடனிருந்தும்
மாபெருங்கீர்த்தியாய் வாழ்வர். 258

## விஸ்வாமித்திரர் வாக்கு.

வாழ்வரென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
வருங்குருசேய் சனிமூவர்
தாழ்விலாதங்கள் ஆட்சியுச்சம்நட்பில்
தங்கிசுபஸ்தானமே யிருக்க
மீழ்கவேபொன்னும் நண்டுஅரிகன்னிதனு
மீனமொடுவிடை யினிலிருக்க
சூழ்கவேசனிகடகம் துலைதனுமான்மீனில்
சொல்லுமிவ்விராசிதனி லிருக்க 259

## இதுவுமது.

இருக்கவேசேயோனும் சிம்மம்விருச்சிகமுடன்
எழில்மகரம் மேஷம்விடைதன்னில்
பெருக்கமுடனுற்றிட வுள்ளஜாதகத்திற்கு
பேசுமேழொன்பதா மிடத்தில்
வருக்கமுடன்பாம்பு புதனிரண்டுபாபிகளுமே
வாகுடன்சேராது யிருக்கில்
செருக்குடன்செல்வமும் குடும்பமதுவிருத்தியும்
சேயால்யோகமு முண்டாம். 260

## வதிஷ்டர் வாக்கு.

உண்டெனவுரைத்த கௌசிகாகேளாய்
ஓதியமூவரி லிருவர
கண்டிடமேற்சொன்ன விராசியாமதனில்
காணவேபலத்துமே யிருக்கில்
விண்டிடஜாதகி வெகுகீர்த்தியோடுமே
விளங்கியே வுலகினில்தானும்
பண்புடன்வேண புத்திரரைப்பெற்றுமே
பரவிடவாழ்வ ளென்றுரையே. 261

## விஸ்வாமித்திரர் வாக்கு.

உரைத்திடுமென்ற வதிஷ்டமாமுனியே
உற்றதோர் லக்கினமதற்கு
குறித்திடவேழு வொன்பதாமிடங்களில்
கூறிடும் பாபிகளிருக்க

கருத்துடன்குருகுஜன் சனியிவர்மூவரும்
காணபகை நீச்சத்திலேனும்
கருத்துடன் சனிபுதன் வீட்டினிலிருக்க
சாற்றியபனிரண் டிரண்டுங்கேளே. 262

இதுவுமது.

கேழ்க்கவேபாபிக ளிருக்கினுமதனில்
காணவே ஜாதகிதனக்கும்
தாழ்கவேதனக்கும் புத்திரான்றியும்
தையலாள்வருத்தமே யடைந்து
மீழ்கவேபாபுத்திரர் நம்மையுமடைந்து
மெல்லியாள் மனமதுவாடி
சூழ்கவேபலவிதநுன்பமு மடைந்துமே
தோகையும் வருந்துவள்காணே. 263

வதிஷ்டர் வாக்கு.

காணுமென்றுரைத்தக் கௌசிகாகேளாய்
கருதியலக்கின மாமதற்கு
பூணவேயைந் தொன்பதேயடேழும்
பொருந்து மிவ்விடங்கலல்லது
தாணவே மூன்றைந்தேழவனுடனே
சனிபுதன் பாம்புகளேனும்
தேசணவேயிருக்கினும் பார்க்கினும்புத்திரர்
தோகையாள் தனக்கிலைசாற்றே. 264

விஸ்வாமித்திரர் வாக்கு.

சாற்றெனவிரைத்த வதிஷ்டமாமுனியே
சரியவருடன் குருகதிரோன்
தோற்றவேயிருக்கினும் பார்க்கினும்ஜாதகி
தோஷமாய்ப் பலதேசமலைந்து
போற்றியேசாலதாமதத் தின்பேரினில்
புத்திரதாப முண்டாகும்
தேற்றமாமுந்திப் பெண்ணதுஜனிக்கும்
தேறியப்புத்திரர் ஜெனிக்கும்பின்னேதே. 265

வதிஷ்டர் வாக்கு.

ஓதெனவுரைத்தக் கௌசிகாகேளாய்
உகந்து பொன்சனிகுசனிவர்கள்
தாதெனமூவரி லொருவர்மேற்கூறிய
தானங்களேற மற்றவர்கள்

ஈதெனபலமது குன்றியேயின்றிடில்
   இகழுளப்புத்திரர் பிறந்தும்
ஏதெனப்புத்திரர் சிலகாலமிருந்துமே
   ஏமனூரேகுவா ரென்னே. 266

விஸ்வாமித்திரர் வாக்கு.

என்னவேசொன்ன வதிஷ்டமாமுனியே
   இயம்பிடுங் கன்னிமீன்தேள்மான்
துன்னியவிவைகளில் குஜனுடனல்லது
   குருசனியுடன் புகராவது
பன்னியவல்லது பாம்புகளாவது
   பாவிசந்திர னிருக்கில்
உன்னியேபார்க்கிலும் பெண்களேயதிகமாய்
   உலகினிற்பெறுவனென் றுரைப்பாய். 267

வதிஷ்டர் வாக்கு.

உரையுமென்றுரைத்த கௌசிகாகேளாய்
   ஓதியவாறதிற்கதிர்பொன்
குறைவிலாதிவ்விதப் புருஷகோளிரண்டு
   கொப்பென வந்துமேசேரில்
நிறையவேஜாதகி யானுடன்பெண்ணுமே
   நீடியயுலகினி லீன்று
பெருமாய்சுகமும் பெற்றுமேநாளும்
   பெட்புடன்வாழ்வ னென்றறிவாய். 268

விஸ்வாமித்திரர் வாக்கு.

அறியவேசொன்ன வதிஷ்டமாமுனியே
   அவ்விதராசி யிலிருந்தக்
கிரகங்களுடனே பவக்கோட்கள்சேரில்
   கிளிமொழி புத்திரர்தன்னால்
பெருகியவிரோதம தாவதுமவர்க்கு
   பிறருக்குமக வெனவிருப்பர்
தெரிவைக்குபுத்திரர் தங்களால்சுகமிலை
   திகைத்திடுவா னெனக்கூறாய். 269

வதிஷ்டர் வாக்கு.

கூறுமென்றுரைத்த கௌசிகாகேளாய்
   குலவியலக்கின மதற்கு
நேருமேயீசாரிரண்டைந் தெட்டொன்பான்
   நீடியயில்விடங் களினில்

சூரியன்செவ்வாய் கூடினுமலது
சூழ்பணியோடு சேய்சோ
வீரியசுபர்களிருந்தாலு மவர்க்கு
விரோதிகளான கோள்கூட 270

இதுவுமது.

கூடவேயல்லது பார்க்கவேயிருக்கினும்
குருசனி தனிதனியாக
நாடியேபகைநீச மலதுவாறெட்டில்
நண்ணியேயவைகளி லிருக்கியில்
நீடியபுத்திரர் நிலமதிலீன் றீன்று
நமனுக்கு இறைதந்துமாது
வாடியேபுவியிற் ஜாதகிதானும்
வருந்தியேவிளைப்ப ளென்றறிவாய் 271

விஸ்வாமித்திரர் வாக்கு.

அறியுமென் றுரைத்த வதிஷ்டமாமுனியே
அவ்விதக் கோட்களைத்தானும்
குருமுதலானச் சுபர்களேபார்க்கக்
குலவியஜாதகி தனக்கு
வரிசையாயனேகம் மைந்தரையீன்று
மறலிக்குத் தந்துமேபின்பு
நிறையதாய்ப் புத்திரதீர்க்க முண்டாகியே
நீடியே வாழ்குவள்தானே. 272

வதிஷ்டர் வாக்கு.

தானெனவுரைத்தக் கௌசிகாகேளாய்
தங்கியகுரு சனிமான்மீன்
தேனென விவைகளுடன்கூடிகிரகத்
திகழ்பலாபல வெண்களெடுத்து
போனெனயவரவர் பூராயெண்பேருக்குப்
புகழாய்முன் கூறியபடியே
வனெனக்கண்டறிக் தெண்களெத்தனையோ
யத்தனைப்புத்திர ராக்வுமே. 273

இதுவுமது.

ஆகவேவிங்க வொவ்வொருகிரகம்
அரியசம்பந்த மேயான
பாகமாங்கிரகப் பலாபலனுக்குமே
பரிவுட விதைத்துமேவந்த

ஏகமாமெண்களை யிராசியின்பலனுடைய
எண்ணினில் பெருக்கியேவெட்டில்
ஈகையாய்க்கழித்த சேஷமுன்வந்த
ஈவையுமுன் போலவேழில். 274

இதுவுமது.

ஏழி லுடன்பெருக்கி யென்பதிற்கழித்த
இசைந்ததோர் சேஷமுமான
பழி லுடன் திசாபுத்திகளி லந்தபுத்திரப்
பாவங்களுக்கு சுபமித்துரு
வழியானகிரகங்கள் வருந்திசைப்பொசிப்பி
லாகுமக்கால மாமதனில்
தழைத்திடவிவாகாதி புத்திரலாபஞ்செல்வம்
தாள்வரும்யோகமே சொன்னேன். 275

விஸ்வாமித்திரர் வாக்கு.

சொன்னமனென் றுரைத்த வதிஷ்டாமாமுனியே
சுத்தமாய் மேலுமேகண்ட
பன்னியசேஷமதற்குமே வந்ததோர்
பாவிய திசாபுத்தியாக
உன்னியக்கிரகங்கள் பாபிகளாகியே
உற்றதோர் லக்கினமதற்கு
கன்னியவாக்கு விரையமெட்டாலுங்
காணவேவிம்மனைக் குடையோர். 276

இதுவுமது.

உடையவராவது யம்மனை தன்னிலே
உற்றதோர் கிரகமேவருகில்
அடையவேயவ்விதத் திசாபுத்திகாலத்திற்
அரும்புத்திர நஷ்டமோடின்னம்
வடிவுளக்கணவற் கரிஷ்டமாம்ரோகம்
வந்திடுங்கெண்டந் தண்டனையும்
மிடியதாய்ப்பலவிதக் கஷ்டமொடுபொருள்சேதம்
மேவிவந்தனுகுமே பாராய். 277

வதிஷ்டர் வாக்கு.

பாருமென் றுரைத்த கௌசிகாகேளாய்
பார்மகணிந்து பொன்புகரிவர்
கோரியதிசைகளில் காரிபணிபுகரிவர்
கூறியபுத்தி யாமதனில்

பேருறும்யோகமும் விவாகமும்சுகமும்
பேசவேதன தான்னியமோங்கி
சிருறும்கிரகவாகன முடன்சம்பத்தும்
சிறந்திடுமென்று நீதெரிவாய். 278

## விஸ்வாமித்திரர் வாக்கு.

தெரியுமென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
தினகரன்புந்தி கேதிவர்கள்
சரிதிசைகளிற் சனிமதிமால்புகர்
சார்ந்திடும் புத்தியாமதனில்
வருமகவிற்கு வருத்தமாம்ரோகமும்
வாய்த்திடும் பலவிதகஷ்டம்
உருகிடமனமும் சோகதுக்கமதாய்
உலகினி லுழலுவாள்காணே. 279

## வதிஷ்டர் வாக்கு.

காணுமென்றுரைத்த கௌசிகாகேளாய்
கருதிய சிம்மலக்கினத்தும்
பூணவேபொன்னின் அமிசமாமதனினும்
பூவையாள்வந்துமே செனிக்கில்
தோணவேயோகக் கணவனைமணந்தே
தோகையாள் நல்லொழுக்கமதாய்
வேணதோர்புத்திரப் பாக்கியசம்பத்துடன்
விளங்கவே புவியினில்வாழ்வாள். 280

## விஸ்வாமித்திரர் வாக்கு.

வாழ்வளென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
வசுரர்குரு வங்கிசமாகில்
சூழ்கவேயதிகபோக மொழியுமாய்
சுகமுளசரீர காந்தியுமாய்த்
தாழ்விலாரூபலாவண்ணிய முடன்வெகு
தையலர்தங்களைப் பெறுவாள்
மீழ்கவேகிரகவாகனம் பூமிபொன்
மிக்கவே விவருக்குமுண்டே. 281

## வதிஷ்டர் வாக்கு.

உண்டெனவுரைத்த கௌசிகாகேளாய்
ஓங்கிடுங்கிருக வாகனங்கள்
பண்டெனசகலப் பாக்கியமுடைய
பலகலையுணர்ந்த மேதாவி

தொண்டனும்நல்ல புருடனைமணர்ந்து
தோகையாள் சுகத்துடன்நாளும்
விண்டசங்கீத வித்தைகள்யாவும்
விளங்ககற்றுணர்வ ளென்றறிவாய். 282

விஸ்வாமித்திரர் வாக்கு.

அறியவேசொன்ன வருந்தவவதிஷ்டா
அரும்புதனங் கிசமாகில்
பிரியமாங்கல்வி ஞானமாம்பலவும்
பேதையாள் கற்றுமேயுணர்ந்து
நெறியுளநல்லகணவனை மணர்ந்து
நேரிழை கீர்த்தியோடுலகில்
சரியெனசகல சம்பத்தும்பெற்று
சத்துருடன்வாழ்வ ளென்றோதே. 283

வதிஷ்டர் வாக்கு.

ஓதெனவுரைத்த கௌசிகாகேளாய்
உற்றசே யங்கிசமாகில்
போதவேவந்த ஜாதகிபுவியில்
பொல்லாத விரோதமேயுடையாள்
ஏதெனரோகவழியா யெந்நாளும்
இருந்துமே புருடனைமணர்ந்து
தீதெனகணவன் தன்னைமுன்னிழப்பாள்
தெளிவுடன் கண்டுநீசாற்றே. 284

விஸ்வாமித்திரர் வாக்கு.

சாற்றெனவுரைத்த வதிஷ்டமாமுனியே
சனியவனங் கிசமாகில்
தேற்றெனவந்த ஜாதகிதானும்
தேகமேக்ஷீண மதடைவாள்
போற்றெனவவளும் புவியினிற்றானும்
புத்திரதோஷமே யடைந்து
கூற்றெனபர்த்துரு க்ஷயத்தையுமடைந்து
கோதையு மிருப்பளேகூறாய். 285

வதிஷ்டர் வாக்கு.

கூறுமென்றுரைத்த கௌசிகாகேளாய்
குலவியதேவர்கள் குருவும்
காரியுமிவர்கள் கலந்துகூடிடினும்
காணவே பல்லவுகேளாய்

சேரவேயொருவ ரொருவரைத்தானும்
திருஷ்டியாம் பார்வையேயாகி
கோரியேகேந்திர கோணமேயேறிக்
குலவியேயிருந்தவர் தானும். 286

இதுவுமது.

தக்கதோராட்சி யுச்சமேறித்
தானவர் பலத்துமேயிருக்க
மிக்கதோர்க்கதிர் மதி யாமிவர்தானும்
முரிநண்டுநண்டு பின்வில்லில்
பக்கதோரிந்தயி ராசியிலிருந்து
பரிதியும் புதனேயேகூடி
நிற்கவேயவற்கு யிரண்டினிற்புகரும்
நீடியேயிருக்கினு மின்னம். 287

இதுவுமது.

இன்னியலக்கினம் பொன்னவனிருக்கினும்
எரில்கேந்திர கோணமேயுரினும்
வின்னமில்லாமல் வந்தஜாதகற்கு
வருடமே எண்பத்தியாறும்
நன்னயமாக நடக்கினும்மாது
நற்றிடமோடு யெவ்வனமாய்
கன்னியமாகத்தேக சவுக்கியத்தை
களிப்புடனடைந்துமே வருவாள். 288

விஸ்வாமித்திரர் வாக்கு.

வருவளென் றுரைத்த வசிஷ்டமாமுனியே
வாருடன்மேற்கண்ட கோட்கள்
பெருவளர்கதிர்மதி பேசியயிவர்கள்
பெண்ணிறைகோல் மான்கும்பம்
தருவளரிந்தராசியிற் சேர்தலுந்
தனித்துமே யவரிருந்தாலும்
குருசனியிவர்க பலத்துமேற்சொன்னக்
[illegible] வாழ. 289

இதுவுமது.

வாழவேயின்னம் லக்கினத்தலது
மதியுடனுவது கேளாய்
சூழவேபாபிகள் சேரா திருக்கினில்
சுத்தமாய்வந்த ஜாதகியும்
தோழவேயாண்டுத் தொண்ணூற்றியாறும்
துலங்கிடவாயுளும் பெருகி
ஆழவேயுலகில் அன்புடன்தானும்
அறிவையும் வாழ்குவாள்பாரே. 290

வதிஷ்டர் வாக்கு.

பாறெனவுரைத்தக் கௌசிகாகேளாய்
பகர்களத்திர காரணனை
கூறெனவசுரர் குருசுக்கிறனும்
குலவாயுள் காரகனை
கோறெனசனியிவர்க் குலவியேகேளாய்
கோல்விடைகும்ப மீனதனில்
நேறெனக்கூடி நிலைத்துமேயிருக்க
நீடியலக்கினத் ததற்கு 291

இதுவுமது.

அதற்குமேரண்டு யெட்டுவொன்பானாய்
ஆனதோரந்த ராசிகளில்
குதற்கமாய்ப்பாம்பு குஜன்கதிரிவர்கள்
குலவியே யில்லாமலிருக்க
மிதற்கமாயேழு வொன்பதின்பொன்னும்
வல்லதுசுபர்களு மிருக்க
சிதற்கமாய்வந்தச் சாதகிப்பலன்றனை
ஜெகததுளோ ரறிந்திடச்செப்பே. 292

விஸ்வாமித்திரர் வாக்கு.

செப்புமென்றுறைத்த வதிஷ்டனேகேளாய்
ஜாதகித்தன்னுடக் கணவன்
இப்புவிதன்னில் யாயுள்திர்க்கமதாய்
இருந்துமேவெகு நாளுமட்டும்

செப்பவேபலவித மானவுத்யோகமும்
மேன்மையாய் புரிந்துமேயதனல்
ஒப்பிலாசம்பத்து மோங்கியக்கீர்த்தியும்
உலகினில் பெற்றுமேவாழ்வாள். 293

வதிஷ்டர் வாக்கு.

வாழ்வனென்றுரைத்தக் கௌசிகாகேளாய்
வாருடனிவ்வித மிருக்கும்
சூழ்வனமுடவன் சுக்கிரனுடாகிச்
சுத்தலக்கினத்திற்கு நேராய்
சூழ்வனரண்டுயே ழொன்பானிந்த
இடங்களிலாவதுத்தானே
தாழ்வனபாபிகள் பகையதாய்நின்றுத்
தான்கூடினுலுமே சுத்த. 294

இதுவுமது.

சுத்தமாங்காணச் சுபர்களேயன்றி
சுகமிலாப்பாபிக ளிருக்கப்
பத்தியயந்தஸ்தானுதிபதிகள்
பலமதுப் பெற்றுமேவாழ
இத்தரைமீது வந்தஜாதகியவள்
இருந்துமே சிலகாலம்வருந்தி
உத்தமகணவற்கு வோங்கவயதருபதும்
உலகினிற்சுகமுட னிருப்பாள். 295

விஸ்வாமித்திரர் வாக்கு.

இருப்பனென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
எழில்புகர்முடவனு மிவர்கள்
பொருப்பனப்பெலமற்று பகைநீசராசியில்
பொருந்தியே யிருக்கினுங்கேளாய்
வெருப்பனப்பாப ரவருடன்கூடினின்று
மேவிலக்கினத்தையும் பார்க்க
கருப்பனயிரண்டேழ் யெட்டிந்தயிடங்களில்
காரிசேய் பாம்பிவர்நிற்க. 296

### விஸ்வாமித்திரர் வாக்கு.

உரையுமென் றுரைத்த வதிஷ்டமாமுனியே
உற்றதோர் குஜன்குருயிருவர்
அரையவேயவரவ ராட்சிலிருக்க
அருங்கன்னி துலே குடம்மேஷம்
இரைதண்டுகடக மிந்தராசிகளினில்
இருநீசம்பகை பெருதிருக்க
கரைதனுமேடங் குடம்விடைராசி
கணக்கின் பாம்புசுனகேளே. 304

### இதுவுமது.

கேட்கயிவ்விரண்டுக் கிரகஞ்சேராமல்
கிருபையாய் காணநின் றிடினும்
சூழ்கவேயிந்தும் சுக்கிரன்தனக்கும்
தோன்றென்பதா மிடமதினும்
வாழ்கவேயேழு வொன்பாமிடத்ததிபரும்
வருங்குரு நிறைமதிச்சுபரும்
தாழ்விலாக்கூடி யிருக்கினுமலது
தக்கதோர்சுபர்கள் பார்த்திடினும். 305

### இதுவுமது.

பார்க்கவேவந்த பாவையாள்தனக்கு
பண்புளவிஷேஷமாம் புத்திரர்
தீர்க்கமாயுதித்துந் திகழ்பலயோகமாய்
திரவியம் தான்னியம்பூமி
ஏர்க்கவேகிருக வாகனம் செல்வமும்
எக்காலும் விருத்தியேயோங்கி
பூர்க்கவேபுவியில் புகழவாழ்ந்திடுவள்
விண்ணியவதி யெனச்சாற்றே. 306

### வதிஷ்டர் வாக்கு.

சாற்றுமென் றுரைத்த கௌசிகாகேளாய்
சரிமேற்கூறிய யேழொன்பதினிலே
ஏற்றியச்சனிப்பாம்பு பாபர்களிருக்க
ஏரியகுஜன் சனியிவர்கள்

தேற்றியமான்குடம் மிதுனமோடுகன்னி
தென்னியநண்டு சிலையிவையில்
தோற்றமாயிருக்க ஜாதகிதனக்குந்
தோஷமேயடைவ தோடின்னம். 307

இதுவுமது.

இன்னமுங்கேளாய் யேங்கியேமாது
எழில்புத்திர ரறிஷ்டமேயடைந்து
உன்னியஸ்வீகார புத்திரரைவளர்த்தும்
ஓங்குமவ்வித புதல்வரவரால்
கன்னியாமிவட்குக் கர்மபாதித்தையுங்
காணவுண்டாவது மன்றி
மன்னியவுலகில் மாதுமேவருந்து
மனமதுக் கலங்குவாள்சொல்லே. 308

விஸ்வாமித்திரர் வாக்கு.

சொல்லெனவிறைத்த வதிஷ்டமாமுனியே
சூழுவவ்விதக் கோட்கடம்மை
வல்லதோர்குருமுதற் சுபக்கோட்கள்நோக்கினும்
வலதுசுபர் சேர்ந்துமேயுறினும்
நல்லதோர்ஜாதகி யனேகநாள்புத்திர
றின்றியே வருந்தியேபின்பும்
வெல்லதோர்புத்திர லாபமும்யோகமும்
வெகுதனந்தேடியே வாழ்வாள். 309

வதிஷ்டர் வாக்கு.

வாழ்வளென்றுரைத்த கௌசிகாகேளாய்
வாய்த்தலக்கின மதாமதற்கு
தாழ்விலாயிரண்டேழ் பாக்கியமிவைகளில்
தங்கிடாப் பாபிகளின்றி
சூழ்கவேசுபர்க ளிருக்கினுமலது
சுபர்களே பார்த்திடவின்னம்
மீழ்கவேபுதன்சனி குஜனிவர்மூவரில்
மொழிந்திடு மிருவர்களலது. 310

இதுவுமது.

அல்லதுகுருபுகர் சந்திரன்முனிவர்
ஆட்சியிலிருக்க கேளலது
வல்லதோர்சிம்பம் தனுகும்பம்மீனம்
வரும்மேடம் விடையினிலிருக்க
புல்லவேமந்தப் பூவையர்தனக்கும்
புத்திரலாப விருத்தியுமாய்
நல்லதோர்பர்த்தா தன்னையேமணர்ந்து
நங்கையாள் வாழ்வளென்றறிவாய். 311

விஸ்வாமித்திரர் வாக்கு.

அறிவளென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
ஆனலக்கினத்திற் குக்கேளாய்
புதியுமேரேழு ரண்டொன்பதிலாவது
புதன்சனி குஜனேடாவதுவே
கறியவேபாம்புமுதல் விரோதிகள்சேரினும்
காணவேயளது பகைநீசமாகினுமே
உறியவேபுந்திசனி கூடியிருந்திடினும்
உலகினில் வந்ததோர்மாது 312

இதுவுமது.

மாதவள்தனக்குப் புத்திரறேயன்றி
மனமது வாடியேதானும்
ஆதரவாகவே வன்னிபுத்திரர்களை
யாறியவே வளர்க்கினுமதுவும்
போதவேபுவியில் விர்த்திவாராமல்
பொல்லாங்கு வுள்ளவளாகி
ஏதவேசத்துரு யெங்கெனுமாகியே
ஏந்திழைவருத்தமே யடைவள். 313

வதிஷ்டர் வாக்கு.

அடைவளென்றுரைத்த கௌசிகாகேளாய்
அவ்விதகிரக மாமதனை
வடிவுளபொன்முதல் சுபர்களேபார்க்கினும்
வல்லதுக்கூடினுங்கேளாய்

படிமிசைச்செல்வம் பாவையாளடைந்து
பாலர்களிரண்டுமேயீன்று
கடையிலாக்குடும்பம் தழைத்திடநாளும்
தையலும் சுகமுடனிருப்பாள். 314

விஸ்வாமித்திரர் வாக்கு.

இருப்பனென்றுரைத்த வசிஷ்டமாமுனியே
இலக்கினமதற்கைந்தி லொன்பான்
நெருப்பனசேய்ராகு கூடினுமலது
நீள்கதிர்பாபிகள் கூடிடினும்
பொருப்பனப்பொன்கதிர்கு ஜனிவர்தாமும்
பொருத்தமான மீன்கடகமலது
வெருப்பனக்கதிரோடு அஸ்தமனமாகவே
வீற்றிருக்கினுஞ் சொல்லக்கேளாய். 315

இதுவுமது.

கேட்கவேயல்லது சந்திரன் சுக்கிரன்
கிளரைந்தே ழொன்பதிலேற
மீட்கவேமேற்சொன்ன பாபிகளிருக்கினும்
அல்லதுப்பார்க்கினும் பாராய்
தாழ்க்கவேஜாதகி கெர்ப்பத்தினலுந்
தக்கதோர் பிரசசத்தாலும்
ஆழ்கவேதேக கஷ்டாவரிஷ்டமும்
அடைவதோடின்னமுங்கேளே. 316

இதுவுமது

கேட்டிடவதனல் கண்டமும் நேரும்
கெர்ப்பசேசுமொடு பொல்லா
வாட்டிடும்பிணியும் வருத்தமும்படுவள்
வருஞ்சுதச் சேதங்களாகி
ஊட்டிய யுதிரமதகலேயடைந்து
உயிரதுச்சேத மதாகும்
நாட்டினில் பலவிதத்துக்கமுமடைந்து
நங்கையும் வாடுவாள்கூறுய். 317

வதிஷ்டர் வாக்கு.

கூறுமென் றுரைத்தக் கௌசிகாகேளாய்
 குறித்துமேற்சொல்லியவிடத்து
எதிரியகோட்களை பொன்முதல்சுபர்களும்
 எழில்விழி நோக்கினுமலது
சேரினுமவ்விதத் துன்பங்களனுகிப்பின்
 சிறப்புடன் மாதவள் தானும்
கோரியபுத்திரர் தங்களைப்பெற்றுமே
 கோதைசுகப்படுவளென் றுரைப்பாய். 318

விஸ்வாமித்திரர் வாக்கு.

உரையுமென் றுரைத்த வதிஷ்டமாமுனியே
 உள்ளமேற்கூறிய விடத்தில்
பிறையுடன் புகர்பாம்பு பேசும்பெண்கோட்கள்
 பெலத்துட னிருந்திடப்பெண்ணே
வரிசையாயுலகில் வாகுடன்பெறுவாள்
 வஞ்சியற் காணதுவில்லை
பரிசையாயிதனைப் பாருளோரறியப்
 பண்புடன் கண்டுரைசெய்வாய். 319

வதிஷ்டர் வாக்கு.

செய்யுமென் றுரைத்த கௌசிகாகேளாய்
 செங்கதிரலது பொன்முதலாம்
உய்யவேபுருடக் கோட்களேயுறினும்
 உற்றவர்நோக்க சேரினும்
வையகமீதுவனேகப் பெண்பெற்று
 வருந்தியே மாதிவற்பின்பு
துய்யவேபுருஷ சந்ததியின்றுத்
 துலங்கிட வாழ்குவள்மாதே. 320

இதுவுமது.

மாதேயென் றுனுரைத்த கௌசிகாகேளாய்
 மன்னியேமேடகும் பத்தில்
போதவேசனிகுஜன் பொன்னுடன்கூடிய
 புகழ்கிரகபலாபல மென்களை

தோதெனயவரவர்க்குபூராயெண்பேருக்கு
துலங்கிடக் கொடுக்கவந்தவிவு
ஒதெனப்புத்திரலாப மாமென்றும்
உரைத்திட வேண்டுமே காண்பாய். 321

விஸ்வாமித்திரர் வாக்கு.

காணுமென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
கருதாசிபல வெண்கலையும்
பூணவேநின்றக் கோட்களெண்கலையும்
பெருக்கியே யெட்டினில்கழித்த
தோணுமோர்சேஷமும் வந்ததோரீவையும்
துலங்கவே யேழினிற்பெருக்கி
வேணவேநவத்திற் கழிக்கவேவந்த
விளங்கிய சேஷபலனுரைப்பாய் 332

வதிஷ்டர் வாக்கு.

உரையுமென்றுரைத்தக் கௌசிகாகேளாய்
உற்றதோர் சேஷமுமுரிய
வருந்தசாபுத்திச் சுபக்கிரகமதனின்
வாழுஞ்சஞ்சார காலத்தில்
பெருகியப்புத்திரலாபமாம் விருத்தியும்
பிரபலயோக முண்டாகும்
அரியவேபாபர்தினசயாகிற்பிணியும்
அரிட்டமும் நேருமெனச்சொல்வாய். 328

விஸ்வாமித்திரர் வாக்கு.

சொல்லுமென்றுரைத்த வதிஷ்டனேகேளாய்
சேயிந்துக் கதிர்குருதிசையிற்சிலபாகம்
புல்லவேயுக்திபுகரிவர்கள் தசைகளினும்
பொன்சனிபாம்புப் புகருடனிவர்கள்
வெல்லும்புத்திகளினில் ஜாதகிதனக்கும்
விவாக சுபசோபனம் நடக்கும்
நல்லதோர்குடும்ப விருத்தியுங்கணவற்கு
தன் அம்பலமுயோக முண்டாம். 324

வதிஷ்டர் வாக்கு.

உண்டெனவுரைத்தக் கௌசிகாகேளாய்
ஒதவேயின்னமும் பலன்கள்
பண்டெனப்பிரபலமோடு நூதனகிராமம்
பலசெல்வம் வாகனம்பூமி
கண்டிடக்கன்று காலிவிருத்திகளும்
களிப்புறுமிவ் வகைப்பலன்கள்
கொண்டிட்நாளுங் குறையிலாதோங்கி
கோதையும் வாழ்குவள்மேலாய். 325

விஸ்வாமித்திரர் வாக்கு.

மேலனவுரைத்த வதிஷ்டமாமுனியே
வேதியன்றிசைமற் றோர்பாகம்
மூலமாம்பாம்பின் றிசைச்சிலப்பாகம்
முடவனுமித்திசை தன்னில்
சிலமாய்ப்பலன்கள்
சிறப்புடனளித்துக்
கோலமாம்கதிர்சேய்ப் பாம்பிவர்புத்தியில்
கொடுத்திடும் பலனதைச்செப்பாய். 326

வதிஷ்டர் வாக்கு.

செப்புமென்றுரைக் கௌசிகாகேளாய்
சேயுடன்கணவற்கு அரிட்டம்
ஒப்பிலாதோஷம் துக்கமும்பீடை
உற்றிடும்தேச சஞ்சாரம்
தப்பிதமாம்பலவிகாதமும் வழக்கும்
தனமுடன்பூமியும் போகும்
கப்பியபொல்லாக் கஷ்டமும்நேர்ந்து
கலங்குவள் மாதெனச்சாற்றே. 327

விஸ்வாமித்திரர் வாக்கு.

சாற்றெனவுரைத்த வதிஷ்டமாமுனியே
சார்புளன் குருவிவர்தானும்
தேற்றெனக்கேந்திரத் திரிகோணமாட்சி
தேடியேயிருக்க நட்புச்சம

தோற்றமாமிந்துப் புகரிருவருமே
துலங்கமீன்தேள் கன்னிகோல்மான்
ஏற்றமாயிவர்களேறியேநிற்க
ஏந்திழையாள் வயதியம்பே. 328

வதிஷ்டர் வாக்கு.

இயம்புமென்றுரைத்த கௌசிகாகேளாய்
ஏறியக்கோட்களாமிவர்கள்
தயங்கிடாதிவர்கள் தனித்தலச்சேர்ந்தே
தானவரிருப்பரேயாகில்
நயம்பெறவயது அறுபதுவரையும்
நாணயவதி பதியாக
வயம்பெறவுலகினி லாசாஜ்வியாய்
வாழ்வளென்றே கண்டுணர்வாய். 329

விஸ்வாமித்திரர் வாக்கு.

உணருமென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
ஓதியமேற் சொன்னவிடமும்
கணமருங்கிரகமா மிவைகளுடனே
வருஞ்சனிபாம்பு குஜனிவர்கள்
மணமிலாக்குடி மருவியேயிருக்கில்
மாதவளனுசாரியாகி
குணமிலா தவளா யாயுள்விருத்தியுமாய்
கோதையுஞ்சாதி விட்டகல்வாள். 330

வதிஷ்டர் வாக்கு.

அகல்வளென்றுரைத்த கௌசிகாகேளாய்
அந்தணனிந்து புகரிவர்கள்
இகலவேகேந்திரத் திரிகோணம்நீங்கியே
இசையிலாபகைநீசமேற
இகலவேலக்கினம் தனக்கிரண்டுவியயம்
தானுறைப்பாபிகள் தானும்
புகலவேயற்பவாயுளும் பெற்றுமே 331
புவியினில்பிணியுடன் வாழ்வாள்.

விஸ்வாமித்திரர் வாக்கு.

வாழ்வனென் றுறைத்த வதிஷ்டமாமுனியே
வந்தணணிந்துசாமேல்
நீள்கவேபூரணவ்வாயுள் நூறுவரையும்
நிலத்தினில்விருத்தியாய் வாழ்வன்
தாழ்கவேஸ்திராசியாகி லற்பாயுளாம்
தானுறயுபயமே மத்தியம்
சூழ்கவேயிதனை சுத்தமாய்க்கண்டு
சொல்லுவாய் சாதகர்தனக்கே. 332

வதிஷ்டர் வாக்கு.

தனக்கெனவுரைத்தக் கௌசிகாகேளாய்
தானமேசரந்திரமாகில்
இணக்கமாவயது எழுபதுக்குள்ளாம்
எழில்சராமுபயமதாகில்
கணக்கெனவயது வைம்பதுக்குளாம்
காணவேயுபயஞ் ஸ்திரமாகில்
முணக்கமாம்வயதுமுப்பதுக்குள்ளே
முடிவதுசொல்லவேவேண்டும். 333

விஸ்வாமித்திரர் வாக்கு.

வேண்டுமென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
வியாழனேடிந்திவரிருவர்
காண்டிடப்பலேனை கேந்திரகோணத்தில்
களிப்புடன் வீற்றுமேவிருக்கில்
ஆண்டிடப்புவியில் வந்தஜாதகிக்கு
ஆயுளேபூரணமாகி
பாண்டெனவுலகிற் பாவையும்வாழ்வள்
பலபொருள் தேடியேகாண். 334

வதிஷ்டர் வாக்கு.

காணுமென்றுரைத்த கௌசிகாகேளாய்
கருதிய லக்கினமதற்கு
பூரணவேயாறெட்டு விரையமாமதனில்
பொன்னிந்துகூடியேவிருக்க

நாணவேயற்பவாயு ளாமதனில்
 நாவியேபாபிசேர்ந்திருக்கில்
தோணுமோர்வயதுப் பதினாறுக்குள்ளே
 தோகைக்கு வாயுள்முடிவாகும். 335

விஸ்வாமித்திரர் வாக்கு.

ஆகுமென்றுரைத்த வசிஷ்டமாமுனியே
 அவ்விதராசி யில்தானும்
பாகமாயிரண்டுசுபர்களுங்கூடி
 பண்புடனிருக்கவேகேளாய்
ஏகமாம்வயது மறுபத்தாறும்
 ஏந்திழைவாழ்ந்துமேயிருந்து
தாகமாயதன்பின்பு ஆவியும்நீங்கி
 தானவள்கைலையே சேர்வள். 336

வசிஷ்டர் வாக்கு.

சேர்வளென்றுரைத்தக் கௌசிகாகேளாய்
 சிறந்திடுங்குருவிந்திவர்கள்
நேர்பெறவொவ்வொருப் பாபியைக்கூடினும்
 நிலையதாய்முன்சொன்ன க்ஷேத்திரம்
பேர்வளரேறினும்லது பாபக்ஷேத்திரம்
 பற்றிமூன்றுறெட்டு விரையம்
ஏர்பெறநிற்கினும் ஜாதகிதனக்குமே
 இயம்புவாயற்பமேவாயுள். 337

விஸ்வாமித்திரர் வாக்கு.

அற்பமென்றுரைத்த வசிஷ்டமாமுனியே
 ஆனதோர்குருஇந்து இவர்கள்
கொற்பனமித்துரு வானவோர்பாபரை
 கூடிடில்வயது பதினெட்டாகும்
அற்பனகுருசந்திரன் பலமற்றுபகைநீச
 அசுபக்ஷேத்திரமதிலிருக்க
கற்பனலக்கினந்தன்னிலாவதுவலது
 சாணலக்கினத்தைப் பார்க்க. 338

### விஸ்வாமித்திரர் வாக்கு.

பார்க்கவேவிரண்டுப் பாரிசத்திலேகேள்
பாபிகள் நின்றுமே யிருக்கில்
ஏர்க்கவேவந்தச் சாதகிப்புவியில்
எழிலுடன்நன்றதாய்வாழ்ந்து
பூர்க்கவேநல்லப் புகழ்பெருங்காலம்
பூவையும் வாலிபமதனில்
தோர்க்கவேமாது ஆவியும்நீங்கித்
தோகையும் மரணமேயாவள். 339

### வதிஷ்டர் வாக்கு.

ஆவவென்றுரைத்த கௌசிகாகேளாய்
அந்தணனிந்திவர் தாமும்
தாமனயவர்கள் தாமுமே பெலக்கில்
தான்வயதைம் பத்திரண்டும்
நாமெனவுலகில் நங்கையும்வாழ்ந்து
நற்குணமுடையவளாகிப்
போமெனப்பின்பு ஆவியும்நீங்கி
புகழுளநற்பதியடைவாள். 340

### விஸ்வாமித்திரர் வாக்கு.

அடைவவென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
அம்புலிதனக்குமேகேளாய்
வடிவுளவுபயபாரிசத்தினிலாவது
வரியலக்கினமதாமதற்கு
உடையதோருபயபாரிசமலதுகேள்
உற்றவாறெட்டினி லாவது
மிடியுளபாபிகளிரண்டுபேர்சேர்ந்துரில்
முப்பத்திரண்டு வயதறிவாய். 341

### வதிஷ்டர் வாக்கு.

அறியுமென்றுரைத்த கௌசிகேளாய்
அந்தணனல்லது சுங்கன்
குறியெனலக்கின மலதுவேழாமிடம்
குலவியேயிருக்கினிற்கின்கேளாய்

திறையவேவயது விருத்தியுடையனாய்
    நீணிலத்தோர்களும் புகழ
பிரியமாயெவற்கும் பேணியேநடந்து
    பெரும்யோகபோகமும் பாராய். 342

விஸ்வாமித்திரர் வாக்கு.

பாருமென்றுரைத்த வஷிஷ்டமாமுனியே
    பண்புளவக்கினமதற்கு
கூரியவிரண்டு மூன்றினிற்சுன்பாம்பு
    குற்றமாம் பாபர்களின்றி
நேரவேசுத்தமாயிருக்கினு மலனுசுபர்
    நின்றுமே யிருக்கினும்பார்க்க
எறியவொன்றேமூ நலமதாமிந்த
    இடத்தினிலியம்பிடக்கேளாய். 343

இதுவுமது.

கேட்கவேகுருவிந்து புகர்புதன்வொன்றுகி
    கேந்திரதிரிகோண மேறி
வாழ்கவேவுச்ச நட்பாட்சியாமிடங்களில்
    வாகுடனிருந்திடக் கேளாய்
நீழ்கவேசெவ்வாய்க் கேந்திரமலது
    திரிகோணமேறி நின்றிடினும்
மீள்கவேஜாதகி கணவன்மிகப்பொருள்தேடி
    மேதினியிலாயு ளுடனிருப்பான். 344

வஷிஷ்டர் வாக்கு.

இருப்பனென்றுரைத்த கௌசிகாகேளாய்
    எற்கவேமேற் சொன்னபடியே
விருப்பெனக்கதிர் புதன்விளங்குஞ்சேயிவர்கள்
    வீண்பகை நீசமேயேறி
தருப்பெனமகரம்கும்பம் விடைகோல்தேள்
    தானுறுமிந்த ராசிகளினில்
பொருப்பெனவிருந்துமே பாம்புசனிமுதலிய
    பல்லவைக்கூடி நின்றிடினும். 345

இதுவுமது.

நிற்கினு மிரண்டேழுவொன்பதாமிடமிர்த
நீடியவிடமதிற் கேளாய்
பக்கமேகுஜனுடன் பாம்புசனிமுதலிய
பாபர்களிருவர் சேர்ந்திடினும்
மிக்கவேயேழலது வெட்டிற்குஜனுடன்
இருபாபரொருவர் கூடிடினும்
துக்கமாங்கணவனுயுள் தோஷமுடன்
தோன்றிடும் பலசேதமறிவாய். 346

விஸ்வாமித்திரர் வாக்கு.

அறியுமென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
அந்தணன்புகர் புதன்மூவர்
குறியெனப்பெலந்துக் கேந்திரதிரிகோணம்
குலவியச்சுப மித்துருவிடத்தில்
நிறையெனப்பாபர்கள் கூடாமலிருந்திட
நீடியசாதகித்தானும்
பறுவமாங்காலம் கணவனுயுளுடன்
பலசெல்வம் பாவைக்குமுண்டாம். 347

வதிஷ்டர் வாக்கு.

உண்டெனவுரைத்தக் கௌசிகாகேளாய்
உரைத்தகோள்மூவரிலிருவர்
கண்டெனபலமற்றுபகை க்ஷேத்திரமலது
காணவாறெட்டு விரையத்தில்
பண்டெனமேற்சொன்னக் கிரகமேநிற்கினும்
பாவையும் பாவியமதனில்
கொண்டதோர்கணவற்குதோஷமோடின்னம்
கூறெருணகஷ்டமும் காணும். 348

விஸ்வாமித்திரர் வாக்கு.

காணுமென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
கழரிய மூவரிலொருவர்
காணலேபெலன்கெடில் நங்கையாள்தனக்கு
கனிலுமோர்வயது முப்பானும்

தோணுமோர்காலம் துலங்கியவதினில்
தோஷமாங்கணவனை கைசேர்வள்
பூணவேயின்புப் பூவையாள்வாடி
புவிதனிலுழலுவாள் நேரே. 349

## வதிஷ்டர் வாக்கு.

நேரொனவுரைத்தக் கௌசிகாகேளாய்
சேர்ந்திடும் லக்கினமதற்கு
பேரெனவிரண்டேழெட்டோன் பாணிடத்தில்
பெரும்பாபரன் றியேயிருக்கில்
கூறெனஜாதகிக் கணவனுர்தானும்
குறைவிலா செல்வமதோங்கி
காரெனப்புகழக் கனயோகமுடனே
காசினியில்வாழ்வளென்றியம்பு. 350

## விஸ்வாமித்திரர் வாக்கு.

இயம்புமென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
இலக்கினமாகியவதற்கு
நயம்பெறவிரண்டா மிடத்தினிற்சுபர்கள்
நாடியே இருந்திடக்கேளாய்
வயம்பெறவெட்டில் பாபர்களிருக்க
வந்ததோ ஜாதகித்தானும்
சுயம்பெறமாதுச் சுமங்கலியாகவே
சூழ்புவிதனிலிவள் மரிப்பாள். 351

## வதிஷ்டர் வாக்கு.

மரிப்பளென்றுரைத்தக் கௌசிகாகேளாய்
மருவியலக்கினமதற்கு
குறிப்பதாயதற்கு நவத்தினில்சுபர்கள்
குலவியேயிருந்திட நன்றாய்
பொறுப்பெனவந்தப் பூவைஜாதகியாள்
புவியினி லெவர்களும்மெச்ச
இருப்பெனவஸ்திராபரண பூஷணங்கள்
எழிலுடனணிகுவாளென்னே; 352

விஸ்வாமித்திரர் வாக்கு.

எண்ணுமென் றுரைத்த வதிஷ்டமாமுனியே
இலக்கினமாகியவதற்கு
வண்ணமாய்மூன்றேழ் பதினொன் றிலிருக்க
வரும்புகர் சனியுடனலது
பண்ணவேபாம்பு கூடினும்பார்க்கிலும்
பாரினில் ஜாதகியானவளும்
புண்ணெனவதிக மோகியேயாகி
புருடனைவிட்டுமே யிழப்பாள். 353

வதிஸ்டர் வாக்கு.

இழப்பளென் றுரைத்தக் கௌசிகாகேளாய்
இனன்புதன் குருவிந்தமூவர்
தழைப்பெனக்கேந்திர திரிகோணமுச்சம்
தக்கதோ ராட்சியிலேற
பழிப்பெனசனிபாம்பு முதலியப்பாபரை
பாராமற் கூடாமலிருக்க
செழிப்பெனப்புத்திர விருத்தியும்யோகமும்
சீருடன்காணவே நடக்கும். 354

விஸ்வாமித்திரர் வாக்கு.

நடக்குமென் றுரைத்த வதிஷ்டமாமுனியே
நண்ணியலக்கினமாமதற்கு
படக்கவே யொன்பானேழாமிடந்தானும்
பாம்புமுதல் பாபிகளின்றி
கடக்கவேசுத்தமாயிருந்திடவலது
களிப்புடன் சுபர்கள்பார்த்திடினும்
விடுக்கவேயதனி லிருக்கினிமதற்கு
விளங்கிடப் பலனுரைச்செய்யே. 355

வதிஷ்டர் வாக்கு.

செய்யுமென் றுரைத்த கௌசிகாகேளாய்
சீருடனிருக்கோளவ்வாறு
பையவேஜெனித்திடப் பாவையாடனக்கு
பலவிதச்செல்வமும் பெருகி

வையகம்புகழும் தனதான்னியமோடு
வளம்பெரும் புத்திராலும்
துய்யவேகணவனாலும் வெகுயோகமும்
தோகையா ளடைகுவள்காணே. 356

விஸ்வாமித்திரர் வாக்கு.

காணுமென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
கனகனும் புதனிவர்தாமும்
பூணவேகேந்திரத் திரிகோணமெனினும்
புகழ்வாக்குவிரைய மூன்லாபம்
தோணவேயிருந்து பகைநீசமிலாவிடில்
துலங்கியச் சாதகித்தானும்
வேணவேபாலியத்தில் வெகுபுத்திரலாபமும்
விளங்கதி பலமுடன்வாழ்வள் 357

வதிஷ்டர் வாக்கு.

வாழ்வளென்றுரைத்த கௌசிகாகேளாய்
வழுத்தியக்கோட்களி வருடனும்
தாழ்கவேபாபிகளாவது தனம்விரையம்
தக்கநவமேழிந்த விடத்தில்
சூழ்கவேகுருபகை நீசமுறப்பாம்புபுத
னோடுசனிபாபர் களிருக்க
ஆழ்கவேஜாதகிபலபொருள் நாசமொடு
அருஞ்சுதனைப் பெற்றுமேயிழப்பாள். 358

விஸ்வாமித்திரர் வாக்கு.

இழப்பளென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
இயம்பியவக்கேயனீ தாமும்
சூழ்கவேபொன்னிந்துமுதலிய சுபகோட்கள்
சுத்தமுடன் னோக்கினிற்கேளாய்
மீள்கவேமுன்னுமுண்டானவை நஷ்டமாய்
மிக்கவே பின்காலமதனில்
தாழ்விலாப்புத்திர லாபத்தையடைந்துமே
தான்விருத்தி யடைவளேகாண். 359

வதிஷ்டர் வாக்கு.

காணுமென் றுரைத்தக் கௌசிகாகேளாய்
கருதுமிரண்டே ழொன்பா தனில்
பூணவேபாம்பு சனிபுதன்கொடியப்
பாவிகளதனிலே யிருக்கில்
காணவேமாது மலடியாய்வாழ்ந்து
நங்கை ஸ்விகாரபுத்திரரால்
தோணவே கர்மபாத்தியமடைவளென
தொகுத்துநீ கண்டுரைசெய்வாய். 360

விஸ்வாமித்திரர் வாக்கு.

செய்யெனவுரைத்த வதிஷ்டமாமுனியே
சென்மலக்கினமதா மதற்கு
துய்யவிரண்டேழொன்பானே தேனுமிரண்டுத்
தானத்திலாவது கேளாய்
புய்யவேபுகாலது புந்திகிருஷ்ணப்பட்ச
புன்மதிபாம்பி வர்தம்மில்
எய்யவேயெவர்களேறி நின்றாலும்
இயம்புவேன்கேள் பலனினிதாய் 362

இதுவுமது.

இனிதெனச்சுபர்களிந்து நோக்கிடினும்
எழிலுளஜாதகி தனக்கும்
கனிதெனசந்ததியதிக பிரபலமாகிக்
களிப்புறும் பெண்களால்தானும்
உனிதெனவுலகில் வோங்கிடநாளும்
உற்றதோர் கீர்த்தியும்பெற்று
புனிதமாய்ப்பொருளும் புகழுடன்தேடி
பூவையுஞ் சுகமடைதயடைவாள். 362

வதிஷ்டர் வாக்கு.

அடைவளென் றுரைத்த கௌசிகாகேளாய்
அவ்விதாரசியிற் பாபர்
தடையெனக்கூடியிருக்கினும் நோக்கினும்
தனயர்கள் விருத்தியேயின்றி

கடினமாம்ரோகப்பாதையு மடைந்து
கலங்குவள் குடும்பநாசமுமாய்
நெடியதோர்பகையும் நிந்தையும்விளைந்து
நேரிழை யல்லவளெனச்சாற்றே. 363

விஸ்வாமித்திரர் வாக்கு.

சாற்றுமென் றுரைத்த வதிஷ்டமாமுனியே
சரியவள் தனக்குமேகேளாய்
நேற்றியாய்ப்புத்திரர் நிலைத்துமேநிற்கினும்
நேர்ந்திடும் மத்தியகாலத்திற்
தோற்றுமேபின்பு தோகையாளுடனே
தோன்றியக்கணவரும் புதல்வர்
தேற்றவேபரதேசமே யடைந்துமிவர்
திகைத்துயிர்மாள் வரென் றுரையே. 364

வதிஷ்டர் வாக்கு.

உரையுமென் றுரைத்த கௌசிகாகேளாய்
உருங்குருகுஜன் ததிர்புந்தி
நிரைபணியிவர்கள் திசைகளிலிருந்து
நீள்புகர்பொன்சனி புந்தி
வருகுமக்கால மதனிலேவிசேஷ
வளம்பெரும் யோகமும்வாய்க்கும்
பெருகியவிவாக சுபசோபனதிகளும்
பெட்புறும் புத்திருண்டாம். 365

இதுவுமது.

உண்டாகுமின்னுங் கணவனுர் தனக்கு
ஓங்கிடும் பிரபலச்செல்வம்
கண்டிடகிரகவாகன சம்பத்தும்
கனதன தான்னியாதியோடு
பண்டெனவஸ்திராபண பூஷணங்களும்
பலித்திடுமி லாபமென்மேலாய்
விண்டிடுமதிகார விருத்தியுங்கணவற்கு
விளங்கவே நீடிக்குமறிவாய். 366

விஸ்வாமித்திரர் வாக்கு.

வரியுமென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
வருஞ்சனிசசி புகரிவர்கள்
குரியதோர்திசைகளில் குருபாம்புசசிசனி
குலவியப்புத்தி காலங்களில்
அரியஜாதகிக்கு அனேகவிதவிகாதமும்
அரிட்டமும் புத்திரதோஷம்
பிரியவேகணவற் கனேகவிதபாதையும்
பேசுமவயோகமே நடக்கும். 367

வதிஷ்டர் வாக்கு.

நடக்குமென்றுரைத்த கௌசிகாகேளாய்
நண்ணும் புதனங்கிசமாகில்
தொடுக்குமே யனேகம்பூமியுங்கிரகம்
துலங்கும் வானமுஞ்சம்பத்தும்
அடுக்கதாயிருக்கப் புத்திரான்றியே
அரிவையர்தானுமே வருந்தி
எடுக்கொணாதுல சரீரமோடிருந்து
இப்புவிதன்னிலே வாழ்வாள். 368

விஸ்வாமித்திரர் வாக்கு.

வாழ்வளென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
வான்குருவங் கிசமாகில்
சூழ்கவேஜாதகி கணவனுர்தன்னுலுமே
கனாராஜயோகமோடின்னம்
மீள்கவேதனதான்னிய கிரகவாகனமுடன்
மிக்கபுத்திரர்கள் சம்பத்தும்
ஆழ்கவேயடைந்து யனேகபொன்றேடி
ஆசாரஜீவியாயிருப்பாள். 369

வதிஷ்டர் வாக்கு.

இருப்பளென்றுரைத்த கௌசிகாகேளாய்
இயல்புகாங்கிசமாகில்
பொருப்பெண்ஜாதகி பர்த்தர்விரோதமாய்
பலருக்கு மனுகூலியாக

குரிப்பெனதனங்களை கொள்ளையதாகவே
குலவியப்பலருக்கு மீய்ந்து
தரிப்பெனயிவளும் தாரினில்மேலாய்
தான்புகழோங்குவாள்மாது. 370

விஸ்வாமித்திரர் வாக்கு.

ஓங்குமென் றுரைத்த வதிஷ்டமாமுனியே
உருமந்தனங்கிசமாகில்
திங்கென ஜாதகிக் குடும்பவிருத்தியின்றி
திகிலுளவியால் சோர்ந்து
எங்கவேவேதப் பாதையும்பொருந்தி
ஈனஸ்திதியோ டிவள்தாழ்ந்து
பாங்கிலாதாசி பலதேசமலைந்து
பாதைபட்டுழலுவாள்காண. 371

வதிஷ்டர் வாக்கு.

காணுமென் றுரைத்த கௌசிகாகேளாய்
கண்டசேயங்கிசமாகில்
பூணவேஜாத பாலியவயதில்தன்
புருஷனையிழந்துமேநின்று
வேணவேபுத்திரர் தங்களைபெற்றுமே
விழுதாவில்யெமனுக்குயீந்து
தோணவேவெகுதோஷமு மடைந்துழன்றுத்
தோகையுமிருப்பனென்றறையே 372

விஸ்வாமித்திரர் வாக்கு.

அறையுமென் றுறைத்த வதிஷ்டமாமுனியே
ஆயுள்காரகனைச்சனியும்
உறையுபுத்திரகாா னைதோர்குருவும்
ஓதுமாதுர் காரசசியும்
நிறையவேயவரவருச்சமாக்ஷிகட்பு
நீள்கேந்திர கோணமதிலேற
வறைகதிர்புந்தி தகாதிதனுமிதுனமொடு
வானகோல் கும்பமதில்நிற்க. 373

### இதுவுமது.

நிற்கவேபுவி தனில் வந்தபோர்ஜாதகி
　நீடியப்பூரண வாயுள்
மிக்கதோர்வயது தொண்ணூர்க்குமேலாய்
　மேதினி தன்னிலே யிருப்பள்
தக்கதோரிந்தகோள் மூவரிலிருவர் தான்
　தானுரைத்தப்படியிருந்து
புக்கவேயிந்துவை புகழ்சுபர்நோக்கிட
　புகல்வயதருபத்தியாறே. 374

### வதிஷ்டர் வாக்கு.

ஆறெனவுரைத்த கௌசிகாகேளாய்
　அம்புலிபலமதுக்கெட்டு
சீறெனபகைநீசகேூத்திரத்திலேனும்
　செப்புமூன்றாெட்டுவிரையம்
பேறெனயிருந்துக் குருபெலன்கெடினும்
　பேசிடும்சனியவன்பெலக்கி
கோறெனவயது நாற்பத்தியாறும்
　குறைவிலாதிருப்பளென்றறிவாய். 375

### விஸ்வாமித்திரர் வாக்கு.

அறியுமென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
　அச்சனிபலமதுக்குறைந்து
குறியுமூன்றெட்டார் விரையமாமலறு
　கூறியப் பகைநீசமேவ
தெறியுவேவயது முப்பத்திரண்டினுள்
　திகழுளப் பாலியந்தனிலே
பிறியவே மாரகம்வருமெனக்கண்டுமே
　பேசுவாய் பூவையாள்தனக்கே. 376

### வதிஷ்டர் வாக்கு.

தனக்கெனவுரைத்தக் கௌசிகாகேளாய்
　தாமெட்டுவாக்கு வீரயில்
இனக்கமாயதனில் தவிகுஜன்பாம்பும்
　யேறியே யிருந்திடக்கேளாய்

தனக்கெனசுபர்கள் கேந்திரகோணத்திற்
காணவே யில்லாமலிருக்கில்
செனிக்கவேவந்தஜாதகி பாலியத்தினிற்
சோமாாக மதுக்காணும். 377

## விஸ்வாமித்திரர் வாக்கு.

காணுமென்றுரைத்த வதிஷ்டாமாமுனியே
காரியுங்குரு ரண்டுபேர்கள்
தோணுமதி கதிர்கேந்திரகோணத்திற்பெலத்துமே
துய்யசுபர் சம்பந்தம்பெரிலோ
பூணவேவந்த ஜாதகிதனக்குமே
புகல்வயதருபது வளர்க்கும்
வேணவேயெவற்கும் விளங்கவேவாழ்ந்து
விண்பதியடைகுவள்சாற்றே. 378

## வதிஷ்டர் வாக்கு.

சாற்றுமென்றுரைத்த கௌசிகாகேளாய்
சரியிவரோடுமே கேளாய்
எற்றியபாபிகள் கூடினும்லக்கினத்திற்கு
இரண்டு பாரிசத்தினிலேனும்
தூற்றியப்பாபிகள் தோன்றியேநிற்கினும்
துலங்கிடுஞ் ஜாதகிதனக்கு
ஆற்றவேயற்பவாயுளா மென்றுமே
அறியவே தெரிந்திடச்செல்லோ. 379

## விஸ்வாமித்திரர் வாக்கு.

### வேறு-விருத்தம்.

சொல்லெனவுரைத்திடும் வதிஷ்டமாமுனியேகேள்
சுன்னவன்பகை நீசமேறியே
சோர்வுறப்பாபவர்க்கூடிடில் பாலியத்தில்
சுத்தஜாதகியர்யுள் முடிவாம்
புல்லவேயிவ்வித மிருந்திடுங்கோட்களைப்
பூரணச்சந்திரன் குருவும்.
புகரிவர் நோக்கினுமல்லதுசேரினும்
புகலும் லக்கினமெனுமதற்கு

வல்லதோருபயப் பாரிசத்தினில்லதுகேள்
வம்புவிதனக்குமே பாராய்
வாகுளவுபயபாரி சத்தினிலாவது
வண்மைசேர் சுபர்களுமிக்க
நல்லதோர்வயதுயன் பதின்மேலாய்
நங்கையாள் தானுமேயிருந்து
நயம்பெறவதிகம் பிறபல்லியயோகமும்
நாடிடச்செல்வமும் வாழ்வள். 380

## வதிஷ்டர் வாக்கு.

வாழ்வளென்றுரைத்திடுங் கௌசிகமுனியேகேள்
வலகதிர் சந்திரனிவர்கள்
வாகுசேர்பலமுள்ளச் சுபக்ஷேத்திரங்களிலும்
வளர்கேந்திர கோணத்திலிருந்து
ஆழ்கவேயவரவற்கிணையுள்ள சுபர்களை
அடவாகக் கூடியிருந்திடினும்
ஆனதோரேழொன்பானிடத்திற் பாபர்களின்றி
அருஞ்சுபர் வீக்ஷண்ணியமலது
சூழ்கவேசுபர்களுமிருக்கிற் ஜாதசுகிகணவன்
சுகமுடன் வெகுவயதிருந்து
சுத்தவிருத்தப்பருவகாலம் வரைமேலாக
சூரமுள வல்லபனுமாகி
வீழ்கவேயாவரும் பணிந்திடவாள்குவன்
மொழியுமவ்வித கோட்களுடனே
மீதியவிரண்டுப்பாவிகள் சேர்ந்திட
மத்தியவயதிற் கணவனிறப்பான். 381

## விஸ்வாமித்திரர் வாக்கு.

### வேறு-விருத்தம்.

மறிப்பனென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
மன்னியலக்கின மாமதற்கு
குறிப்புளயேழு பனிரண்டொன்பதனில்
குலசுப ரிருக்கினிமலது

திரிப்பென வந்தஸ்தானாதிபதின்
தரும்புகர்ச்சி குருவைச்சேர
இருப்பெனப் பூமிக்கிமகவாகனங்கள்
எந்தழைப் படைத்துமேவாழ்வள். 382

வதிஷ்டர் வாக்கு.

வாழ்வவனென் றுரைத்தக் கௌசிகாகேளாய்
வாருளலக்கின மாமதற்கு
தாழ்வுளயேழெட்டு பனிரண்டிற்பாபர்
தானுற யவ்விடத்ததிபர்
பாழ்கவே பாபமனையலதுபாபர்களோடு
பற்றிகூட வலதுபார்க்க
ஆழ்கவேபால்லியத்தில் மங்கலியாகியே
அதிககனமுடையளயிருப்பள். 383

விஸ்வாமித்திரர் வாக்கு.

இருப்பனென் றுரைத்த வதிஷ்டமாமுனியே
இலக்கன மாகியவதற்கு
அருப்பனரண்டேழொன்பதாமதிபதிகள்
ஆறில் சனிவீட்டிலாவதுவே
குருப்பனமூன்றுறு விரைத்திலேனும்
குளவியாண்டேழி நவமதிலேனும்
பொருப்பெனயெதிலேனும் பாபர்களிருக்க
புருடற்குமாரகமுண்டாகும். 384

வதிஷ்டர் வாக்கு.

உணடெனவுரைத்தக் கௌசிகாகேளாய்
ஓதுமவ்விதக் கோட்களுடனே
பண்டெனயிரண்டுச் சுபர்களேகூடில்
பாவையாள் வயதருபத்தாரும்
கண்டிதமாகவே மாங்கில்லியவிருத்தியுடன்
கணவனேடொற்றுமே யிருந்து
தொண்டெனயோகவதியாகிப் புவியில்
துலங்கிட வாழ்பவளாகும். 385

விஸ்வாமித்திரர் வாக்கு.

ஆருமென் றுரைத்த வதிஷ்டமாமுனியே
அரும்புகர்ச்சி யிவர்களுடனே
தாகமாஞ்செல்வாய் பாம்புமுதற்றீக்கோள்
தன்னிலெவரேனுமே சேரில்
போகவேகணவனுர்த்தனக்குமே விரோதமாய்
பூவையும் பலரையாதரிப்பள்
பாகமாம் மத்தியவயதினிற்கணவனும்
பாலோகஞ் சேருவன்காணே. 386

வதிஷ்டர் வாக்கு.

காணுமென் றுரைத்தக் கௌசிகாகேளாய்
கனகனிந்திவர்களா கிடினும்
தோணவேசந்திரணலது லக்கினத்திற்கு
திரிகோணகேந்திர மதிலிருந்து
பூணவேபத்துநால்வாக்கில் சுபர்மேவிட
பூவையர் கணவனுல்தானும்
வேணதோர்கிராமமும் பூமிமுதல்செல்வமும்
விளங்க வாழுஞ்சுமங்கலியாம். 337

விஸ்வாமித்திரர் வாக்கு.

வேறு-விருத்தம்.

ஆமெனவுரைத்திடும் வதிஷ்டமாமுனியேகேள்
ஆனதோர் புந்திபுகர்மதிகதிர்
அவரவர்களுக்குறிய கேந்திரகோணத்தினில்
அருஞ்சுபப் பலத்துடனிருந்து
தாமெனநவமேழுதனமிந்த விடங்களில்
தான்பாபக் கோட்களேயின்றி
தக்கசுபரிருந்திடவல்லது சுத்தமாய்த்
தழைக்கவே தானுமேயிருக்கில்
நாமெனப்புவியினில் வந்தஜாதகியுமிக
நலம்பெரும் பிரபலமான
நற்புத்திரலாபமெனும் ஸ்திரிபுருஷசந்ததி
நங்கையர் விருத்தியதாகி

மேவுப்புவி ராஜயோகம்பெற்றுமே
புவியினிலெவர்களும் மகிழ
பூஷணவலங்காரவதியாகி நிதியோங்க
புகழுடன்வாழ்குவாள் சிறே. 388

வதிஷ்டர் வாக்கு.

சீரொனமேற்சொன்ன கிரகம்நால்வரில்மூவர்
சிறப்புடன் பலத்துமேகேளாய்
சித்தமாய்நவமேனு மாறிலாவதுசுபர்கள்
சேரவிருக்கினி ஸ்ற்பமான
பேரொனஸ்திரிவிருஷம் புத்திராதிலாபமும்
பெருகியே மிகவுமேலான
பேசுநற்சுகத்தையே யடைந்துவாழப்படுவள்
புகன்ற நாற்கோட்களிலிருவர்
வீரொனபலத்துமே சுபக்ஷேத்திரமாகிகுரு
வீட்சண்ணியம் பெற்றிடினுமலது
விளங்கவேசந்திரன் சுக்கிரனிவரிருவர்
விழிநோக்கி யிவர்களைப்பார்க்க
பூரொன புருஷசந்ததியற்பம்பெண்களோ
புகழுடன் வெகுவிருத்தியாகி
புகலுறும் சாஸ்திரவிருத்தியோங்கிடச்சுகமுடன்
பூதலம்புகழ்வே வாழ்வாள். 389

விஸ்வாமித்திரர் வாக்கு.

வேறு-விருத்தம்.

வாழ்வளென்றுறைக்கவந்த வதிஷ்டமாமுனியேகேளாய்
சூழ்கமேற்சொன்னநால்வர் தன்னிலோர்க்கோட்பலக்கில்
தாழ்கவேஜாதகிக்கித்தான் புத்திரவிருத்தியின்றி
ஆழ்கவேபுவியின்மீது அகமதுவாடுவாளே. 390

வதிஸ்டர் வாக்கு.

வேறு-விருத்தம்

வாடுவளென்ற வதிஷ்டமாமுனியே
லரிய லக்கினமெனுமதற்கு

நாடியாண்டேழ்நவமதிற் கதிர்மதி
நண்ணிடசனிபனி மாலவர்கூட
தேடியவல்லது பாம்புகுஜசனியிவர்
தனமேழு நவத்தினிலிருக்க
பூடியேவந்தஜாதகி தனக்குப்
புத்திரசேயிலை யெனப்புகல்வாய். 391

விஸ்வாமித்திரர் வாக்கு.

புகலுமென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
புகழ் சுபர்கலந்ததிர்நிற்க
அகலமுன்சிலநாள் புத்திரரின்றியே
அதன்பின்பு பெண்களைபெற்று
இகலவேகாலதாமதத்தின் வேற்கேளாய்
ஈனமாம் புத்திரரைப்பெருவாள்
புகலவேபெற்றும் புகழதுயில்லாமல்
பூமியிலுழலு வாள்காணே. 392

வதிஷ்டர் வாக்கு.

காணுமென்றுறைத்தக் கௌசிகாகேளாய்
கயறுமக்கோளொடு சண்டு
வீணராம்பாபிகள் சேரில்சிலகாலம்வரை
விளங்கவே சந்ததியிருந்து
பூணவேகாலதாமதத்திற்கு வுதவும்
புத்திரர் நஷ்டமேயடைந்ந
நாணவேபலவாரர்ய்ச் சிதரீயேபோமென
நயம்பெறக்கண்டுறை செய்வாய். 393

விஸ்வாமித்திரர் வாக்கு.

செய்யுமென்றுறைத்த வதிஷ்டமாமுனியே
சுக்கிரன் கதிர்மதிப்பாம்பு
நையவேயிவர்களின்றின சயினில்குஜன்குரு
நிலவொடுசனியிவர் பொசிப்பில்
எய்யவேவிவாக சுபசோபனமோடின்னம்
ஏராளமான பூமிகளும்
துய்யவே கிரகவாகன க்ஷேத்திரங்களும்
துலங்கிடும் செல்வமும்பார்த்த 394

இதுவுமது.

பார்க்கவேபர்த்தா பந்துக்கள் தனக்கும்
பாவியகுடும் பங்களுக்கும்
நிர்க்கமாம்ராஜயோகப் பிரபலமும்
நிகழுறுந்தனமுந்தானியமும்
பூர்க்கவேவஸ்திராபாண பூஷணங்களும்
புகழுடன்றுதனமுஞ்சேரும்
எர்க்கவேநாளும் உத்தமப்பலனும்
எழிலுடனடக்கு மென்றறிவாய். 395

வதிஷ்டர் வாக்கு.

அறியுமென்றுரைத்த கௌசிகாகேளாய்
ஆறில்குருசனிபுதன்றிசையில்
பறியசனிபாம்பு குருபுகர்பொசிப்பில்
பர்த்துருபுத்திராதிகளுக்கு
குறியதோர்தோஷமும் கொப்பபங்கங்களும்
குற்றமாமரிஷ்டங்களாலும்
பிறியவேபலவித வுபாதிகள்செய்தலுமே
பீடைகள்நேர்வதோடின்னம். 396

இதுவுமது.

இன்னமுங்கேளாய் கணவன்முதலானோர்க்கு
இமிசையொடுவரும்யோகபங்கம்
பன்னியப்பலவிதத் துக்கசோகங்களும்
பாதேசசஞ்சாரமோடு
கன்னியகஷ்டங்கள் கணவன்முதலானோர்க்கு
காட்டிடும்கஷ்டமாம் பிணியும்
வின்னமாம்சித்தப் பிறமைமுதலான
வெகுதுயாலுகிடுங்கூடே. 397

விஸ்வாமித்திரர் வாக்கு.

கூறுமென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
குலவுமிவ்விதலக்கினமதனில்
சீறுறுங்குருவினங்கிசமாகில்
செழித்திடுங்கும்பமேவிருத்தி

பேறுறுமாசாரஜீவியாய் தேவதாப்
　பக்தியுமுள்ளவளாகி
நேறுளசெல்வமொடு நீடுமதிகாரமும்
　நேர்மையுடன்பெற்றுமேவாழ்வள். 398

## வதிஷ்டர் வாக்கு.

வாழ்வளென்றுரைத்த கௌசிகாகேளாய்
　வரும்புதனங்கிசமாகில்
மீழ்கவேகல்வி முதலியவித்தையில்
　மேன்மையதாகிய வறிவும்
தாழ்கவேபலவிதக்கஷ்டநஷ்டங்களும்
　தையலாள்படுவதோடின்னம்
சூழ்கவேபுத்திரதோஷமுமடைந்துமே
　தோகையும்வாழுவள்காணே. 399

## விஸ்வாமித்திரர் வாக்கு.

காணுமென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
　கருதுபுகாங்கிசமாகில்
பூணவேநல்லரூபவதியாகியும்
　பொருளதுதேடவல்லவளாய்
தேனுமோர்கடனசங்கீதவுல்லாசியாய்
　துலங்குவளெவர்களும்புகழ
வேணதோர்நிதியொடு யோகவதியாகியே
　விளங்கிடவாழ்வளெனச்சாற்றே. 400

## வதிஷ்டர் வாக்கு.

சாற்றுமென்றுரைத்த கௌசிகாகேளாய்
　சனியவனங்கிசமாகில்
போற்றெனஜாதகி புவியினில்நாளுமே
　பொய்யெனுந்தொழிலதுபுரிவள்
ஏற்றதோர்கணவன் மேலெனேன்றும்விரோதமாய்
　இருந்துமேபலருமேயிகழ
தோற்றுமேதானுந் தோகையாளிவளும்
　[illegible] 401

விஸ்வாமித்திரர் வாக்கு.

புகலுமென் றுரைத்த வதிஷ்டமாமுனியே
புவிமகனங்கிசமாகில்
தகலவேஜாதகிதை தெரியதிடசித்தமும்
தழைக்கவேதனம்பூமியடைந்து
இகலவேயெவ்வன வயதில்புருடன்சுக
மின்றியே மனமதுவாடி
இகலவேநாளுங் கலகமதாய்நின்று
அவிதபட்டுழல்வளெனவியம்பே. 402

வதிஷ்டர் வாக்கு.

இயம்புமென் றுரைத்த கௌசிகாகேளாய்
எவ்விதகிரகங்களதிலோ
வயம்பெறஜெனனமோ வலதுருதுவேயான
வரிவையர்ஜாதகமதற்கு
நயம்பெறப்பலவிதப் பலாபலன்யாவையும்
நன்குடன்கண்டுரைப்பதுவே
ஜெயம்பெறுமுலகினில் சிறதோங்குமென்று
சிற்றமதிலுற்றுரைச்செய்வாய். 403

விஸ்வாமித்திரர் வாக்கு.

செய்யுமென் றுரைத்த வதிஷ்டமாமுனியே
சீரிலாப்பாபர்கள்தானும்
பொய்யவேரண்டாம் ராசியிலிருக்க
பொல்லாதப்பாவ கன்னிகையாம்
பையவேபானுஞ் சேய்கூடியிருக்க
பண்பிலாமுழுபாபியாகும்
துய்யவேகதிர்மதி கூடியேயிருக்க
தொழில்செய்து ஜீவிப்பளறிவாய். 404

வதிஷ்டர் வாக்கு.

அறியுமென் றுரைத்த கௌசிகாகேளாய்
ஆனதோர் சிப்பலக்கினத்தில்
உறைசந்திரனேறுசேயங்கிசமாகில்
உரைக்கினிலனுசாரியாகும்
மறைவிடகோலில் சசியிருக்கசேயங்கிச
மாகவே கொடியவளாவள்
இறைமேடக்தேள் லக்கினஞ்சசியுறசேயங்கிசை
யாகிடில்பரிவிலாப்பாவி. 405

### விஸ்வாமித்திரர் வாக்கு.

பாவியென் றுரைத்த வதிஷ்டமா முனியே
  பாபரெட்டினி லுறவிதவை
மேவியேசந்திர னெட்டினிலிருக்கக்கேள்
  விதவையுமாகியே திரிவாள்
ஏவியேயேழாதி நவத்தாதிகதிர் கூடி
  யாறெட்டிலேறிட விதவை
தாவியேநவத்தாதி யெட்டாதிசுபர்வீட்டில்
  தானுறவாவிம் விதவை. 406

### வதிஷ்டர் வாக்கு.

விதவையென் றுரைத்த விஸ்வாமித்திரனே
  விண்டிருமேழெட்டில்கேளாய்
மிதையவேசனிசேய் மேவியேயிருக்கில்
  வாலிபத்தினில் விதவையாவள்
புதையவேபாப ரேழினிலிருக்க
  பூவையும் வாலிபவிதவை
சதையவேயெட்டில் பாபர்களிருக்க
  சாற்றுவாய்விதவையாமென்றே. 407

### விஸ்வாமித்திரர் வாக்கு.

யாமெனவுரைத்த வதிஷ்டமா முனியே
  யம்புலிப்புந்திபுங்கூடி
வேமெனலக்கினந் தன்னிலேயிருக்க.
  விதவையின் தன்மையுள்ளவளாம்
ஆமெனயஷ்டவர்க்கினிலெத்தனைவருட
  மாகவேசேருகின்றனபோ
நாமெனயத்தனை வருடத்தில்விதவையெனத்
  தானறிந்துந்தெளியவேவோதே. 408

### வதிஷ்டர் வாக்கு.

ஓதுமென் றுறைத்தக் கௌசிகாகேளாய்
  யுற்றசுபரிரண்டினிலிருக்க
மாதவள்கணவனை விட்டுமுன்போவாள்
  மலகதிர்சனி கூடியிருக்க
போதவேபாபரேழினைப்பார்க்கப்
  பூவைவாலிபத்தினிலிறப்பள்
ஆதவன்சனிகூட யவருடன்சுபர்கூட
  அறிவையே யொருவனைமணப்பாள். 409

### விஸ்வாமித்திரர் வாக்கு.

மணப்பமென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
  மருவிடவெட்டினிற்பாபர்
சுணப்புடனுச்சம் சுபக்களேயிருக்க
  சுமங்கலியாகவேமரிப்பள்
வணப்புடன்விடை கன்னிதேளில்சந்திரனுற
  வஞ்சியற்குப் புத்திரநற்பம்
குணப்புடன்தேள்மேடம் லக்கினமாய்சசியுற
  குஜனங்கிசையாந்தனையரில்லை. 410

### வதிஷ்டர் வாக்கு.

இல்லையென்றுரைத்த கௌசிகாகேளால்
  எழிலுளவொன்பதாமாதி
சொல்லுமோராறெட்டுத் தன்னிலேயிருக்க
  சூத்திரர் பிள்ளையுமாகும்
நல்லதோர்நவத்தாதி விரையமேயேற
  நவிலுவாய்விப்பிரர்பிள்ளை
புல்லவேமதிக்கு பனிரண்டில்குருபுகர்
  போயுறவற்பவாயுளாகும். 411

### விஸ்வாமித்திரர் வாக்கு.

ஆகுமென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
  அஷ்டமாதிசனியுங்கூடி
பாகமாய்பதினொன்று.வெட்டினிலிருக்கப்
  பகருவாய் சதவயதென்றும்
ஏகமாம்மூன்றுதி யைந்தாதியேழாதி
  இந்துவுங் கூடவயதற்பம்
சோகமாம்நவத்தாதி பாபருமுச்சமுறச்
  சுமங்கலியாந்தீர்க்கவயதாள். 412

### வதிஷ்டர் வாக்கு.

தீர்க்கமென்றுரைத்த கௌசிகாகேளாய்த
  நிகழேழில் பாபருமிருக்க
மூர்க்கமாம்மூன்றில் சுபர்களுமிருக்க
  மொழிகுவாய் சன்னியாசிபெண்ணும்
எர்க்கவேமகரகும்ப லக்கினமாக
  இந்துமதனிலேயிருக்க
பார்க்கவேகுருவினங்கிசமாகப்
  பதிவிரதையாமெனச்சாற்றே. 413

## விஸ்வாமித்திரர் வாக்கு.

சாற்றுமென் றுரைத்த வதிஷ்டமாமுனியே
சரிமேடந்தேள் லக்கினமாக
போற்றியிந்திருக்கப் பொன்னங்கிசையாகப்
பூவையாள் பதிவிரதையாகும்
எற்றவேமகரக் கும்பலக்கினமாக
இந்துவுமதனிலேயிருக்க
தோற்றவேபுந்தியங் கிசமாகக்கணவனுடன்
தோகையற் கெப்போதுஞ்சுகமே. 414

## வதிஷ்டர் வாக்கு.

சுகமெனவுரைத்தக் கௌசிகாகேளாய்
சுத்தமான கும்பலக்கினமாய்
புகவிந்திருக்க புகரங்கிசையாகிலோ
பூவையே மலடியுமாவள்
தகலவேசனிசேய் லக்கினமேயேறிட
தரைசுதனங்கிசைபுகறேற
மகலபாபர்நோக்க மலடியால்பலபேரை
மாதவள்நேசித்துச்சேர்வாள். 415

## விஸ்வாமித்திரர் வாக்கு.

சேர்வளென் றுரைத்த வதிஷ்டமாமுனியே
செங்கதிர் புதன்கூடியிருக்க
நேர்வளர்மாதுபலர் சிந்தனையறிவள்
நீர்கதிர்குருகூடியிருக்க
ஏர்வளர்வஞ்சனைசெய்தொழிலறிபவள்
எழில்கதிர் புகருமேகூடில்
ஆர்வளர்ஆயுத வகையினால்நிதிதேடி
அரிவையும் வாழ்வள்காணே. 416

## வதிஷ்டர் வாக்கு.

காணுமென் றுரைத்தக் கௌசிகாகேளாய்
கதிர்சனி கூடியேயிருக்க
பூணவேமாதுபித்தனை செம்புவிற்றுப்
புவியினுயர்பவளுமேயாகும்
தோணவேதனுமீனம்லக்கினமாய்சயெழ
துலங்குங்குரு கதிரங்கிசையாக
வேணவேசுபகர்மம் செய்துமேமாதவள்
விளங்கவே புவிதனில்வாழ்வள் 417

## விஸ்வாமித்திரர் வாக்கு.

வாழ்வளென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
வளர்மிதுனங்கன்னிலக்கினமாய்
ஆழ்கவதிலிருந்துற சனியங்கிசையாகில்
அலிவடிவாகவேயிருப்பாள்
தாழ்கவேலக்கினத்திர மாகினுமாவிட்டு
தானவளே காமலிருப்பாள்
சூழ்கவேயுபமதாக சிலநாளுநரில்
சுற்றுவள்வழிநடையில் சிலநாள். 418

## வதிஷ்டர் வாக்கு.

நாளெனவுரைத்துக் கௌசிகாகேளாய்
நவிலுமேழினில்பாபரிருக்க
ஆளெனச்சுபர்பார்க்க கணவனிலையப்படி
யாயிருக்கினு மோட்டிவிடுவாள்
நீறெனநிலமகன் புகரினங்கிசையிலுற
நீடுமேழாமிடமேற
தாளெனப்புருடனை நேசித்துயிச்சித்துத்
தையல்போய் விடுவளெனக்கூறும். 419

## விஸ்வாமித்திரர் வாக்கு.

கூறுமென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
குலவியேயேழினிற்பாபர்
ஆறுமென்றே பலமற்றுமேயவருற
அழகிலாமாதவளாகும்
ஏறுமேழாமிடஞ் சரவிராசிபர்க
ஏழாதிச்சாமதிலிருக்க
தாறுமென்றேவத்தை யல்சாதகியும்
தான்யாத்திரை செய்வள்பாரே. 420

## வதிஷ்டர் வாக்கு.

பாரெனவுரைத்தக் கௌசிகாகேளாய்
பழுதிலாதனு மீனலக்கினமாய்
ஓரெனச்சோமனுற சுக்கிரனங்கிசையாக
ஓர்புருடனிச்சையாள் சுகர்ம்மி
தேரெனச்சனிசேயிருக்கச்சந்திரன்பார்க்க
தலைநரைவரும் வரைவாழ்வள்
காரெனச்சிங்கம் லக்கினமாகச்சோமனுற
கலக்கபுதன்தேவிதானுவாள். 421

### விஸ்வாமித்திரர் வாக்கு.

ஆகுவனென்ற வதிஷ்டமாமுனியே
அறியலக்கினங்கடகமாக
பாகமாய்ச்செயன் கிசையாகிடப்
பாவையவள் பலருடன்சேர்வள்
தாகமாய்ச்சிங்கமே லக்கினமாகத்
தானதிற்சசியுறச் சனியங்கிசையாக
மோகமாய்பிறர்முகம் பார்ப்பவளாகியே
மொய்குழலிருப்பளெனச்சாற்றே. 422

### வதிஷ்டர் வாக்கு.

சாற்றுமென் றுரைத்த கௌசிகா கேளாய்த்
தனுசுமீன் லக்கினமாக
தோற்றுமிந்திருக்க சனியங்கிசையாகத்
தோகையும் வெகுகாமியாவள்
ஆற்றவேமான் கும்பலக்கினமதாக
அம்புலியதிலுற சனியங்கிசையாகில்
தேற்றவேகீழ்ஜாதி யாரையேசேர்வள்
தெளிவுடன் கண்டிதைச்சொல்லே. 423

### விஸ்வாமித்திரர் வாக்கு.

சொல்லுமென் றுரைத்த வதிஷ்டமாமுனியே
ஜென்மத்திற் கேழாவதிடமே
வல்லதோர்கதிரவன் மனையாகவதனிலே
வக்கிரர் தானுமேவாழ
புல்லவேஜாதகி கொணடோனைச்சினந்துமே
போமெனவோட்டியேவிடுவள்
எல்லவேசனிபுதன் ஏழினிலிருந்திட
எந்நாளும் கடந்துமேதிரிவள் 424

### வதிஷ்டர் வாக்கு.

திரிவளென் றுரைத்த கௌசிகா கேளாய்
திகழ்விடை கோவிலிந்தேற
தரியவேகாரிறங்கிசையாகி
கணவனை விட்டுமேமாது

வரியசஞ்சலமாகி வேறொருபுருடனை
வணிதையுங்கூடியேமணப்பள்
அறியவேயேழினில் சனிபுகர்சேய்கூட
அவல்போவளென்று நீயறிவாய். 425

## விஸ்வாமித்திரர் வாக்கு.

அரியுமென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
அடைவுளயேழெனுமிடத்தில்
பரியவேசுபரும் பாபருமிருக்கப்
பாபுருடரிச்சையேகொள்வள்
குரியவேமிதுனம் கன்னிலக்கினமாய்
குலவியோசோமனதிலிருக்க
பிரியவேபுகருடைய யங்கிசையாகவா
பெசும்நல்லழகி பரயோகம். 426

## வதிஷ்டர் வாக்கு.

யோகமென்றுரைத்த கௌசிகாகேளாய்
யுற்றதோர் சுக்கிரன்றனும்
சோகமாய்மேடம் விருட்சிகத்திருக்கச்
சோமனும்மான் கும்பமேற
தாகமாயவரை பாபர்கள்பார்த்திட
தாணியில்வந்த ஜாதகியும்
மோகமாயெங்கனு மோடியேதிரியும்
விபசாரியாவளென்றுரைப்பாய். 427

## விஸ்வாமித்திரர் வாக்கு.

உரையுமென்றுரைத்த வதிஷ்டமாமுனியே
உம்பர்கள் தன்னுடகுருவும்
விருட்சிகம்மகாம் லக்கினமாயிருக்க
விண்மதிப்புகருமேகூடச்
சரியனயவரைப்பாபர்கள்பார்த்திடச்
சாதகமாகியமாது
சூரியனவிந்தக்குவலயம்பழிக்கவே
கோதையும்விபசாரியாவள். 428

### வசிஷ்டர் வாக்கு.

ஆவளென்றுரைத்த கௌசிகாகேளாய்
    ஆறல்கதிர்கூடியேயிருக்க
வாவியேபொன்புகர் கூடியேயிருக்க
    வஞ்சியுமமங்கலையாவாள்
மேவியேபொன்புகர்கூடியேயிருக்கவு
    மிந்துவுமவரையேபார்க்கவு
ஓவியமாதிற்கு வாலிபத்திசைதனில்
    உற்றதோர்கலியாணமாகும். 429

### விஸ்வாமித்திரர் வாக்கு.

ஆகுமென்றுரைத்த வசிஷ்டமாமுனியே
    அம்புலிகுருவுமேகூடி
பாகமாயேழாமிடத்தினிலிருக்கப்
    பாவையர்தனக்குக்கிழபுருடன்
சோகமாமேழாமிடமதுத்தானும்
    சுக்கிரன்மனையாகவிருக்க
நாகமாய்வந்த சாதகித்தானும்
    தாரணியிலனுகூலபாவை. 430

### வசிஷ்டர் வாக்கு.

பாவையென்றுரைத்த கௌசிகாகேளாய்
    பகருமேழாமிடந்தானும்
தேவையேபுதனவர் மனையாகவிருக்க
    திகழுடன்வந்த ஜாதகியும்
ஆழ்கவேயுலகில் யாவரும்புகழ
    அருமைசேர்புலமையாளாவள்
மீழ்கவேயிந்தப்படிகண்டுபிறக்கும்
    மேதினியோர்களுக்குரையே. 431

## தர்க்கசோதிட மென்னும்
## கௌசிக சிந்தாமணி.

## முற்றிற்று.

---